
POND'S

# வீணை

## Veena • எம்ப்ராய்டரீஸ்

கவின டிசைன்கள். கண் நிறைந்த வண்ணங்கள்.
மனதைக் கவரும் சித்திர தையல்
வேலைப்பாடுகள் அமைந்தது.
மற்ற எல்லா சித்திர தையல் துணிகளுக்கும்,
லேஸ்களுக்கும் மிகச்
சிறந்தவை.

டிரேட் மார்க்

*தயாரிப்பாளர்கள்:*

**S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.,**
த.பெ.எண்: 8, குமாரபாளையம் போஸ்ட்
(ஈரோடு வழி)

*எங்கள் இதர உற்பத்திகள்:*
யாழ் (வீணா) மார்க் பருத்தி & ரயான் வேஷ்டிகள்,
சர்ட்டிங்ஸ், பட்டுத்துணிகள்,
விசேஷ ரக பவானி பட்டு ரிப்பன்கள்.

*சென்னை நகர*
*ஸ்டாக்கிஸ்ட் & ஏஜண்ட்:*
அமர்ஜோதி டிரேடர்ஸ்
99, கிடங்கு தெரு, சென்னை-1.

VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VEENA • VE

VE-161

சிறுவர்கள் ஏதாவது ஒரு இலக்கை நோக்கி குறி வைப்பதில் விருப்பமுள்ளவர்கள். பாங்க் ஆப் இந்தியாவில் அவர்களுடைய சொந்த சேமிப்புக் கணக்கில் சேமிப்புக்கு ஒரு இலக்கை ஏற்படுத்திக் கொடுத்தாலென்ன? இதன் மூலம், வெகு சுலபமாகச் சேமிப்பு செய்யும் பழக்கத்தை அவர்கள் உண்டாக்கிக் கொள்ளுவார்கள்.

சேமிப்புப் பழக்கம் ஒரு நல்ல பழக்கம். இதைச் சிறுவர்களின் இள வயதிலேயே மேற்கொள்ளச் செய்வது நல்ல திட்டம்.

# நல்ல குறிக்கு ஏற்றதாக நல்ல இலக்கும் இருக்கட்டும்...

மைனர்களுக்காக சேமிப்பு செய்ய பாங்க் ஆப் இந்தியா தனியாக ஊக்கமளிக்கிறது. சேமிப்பு கணக்கின் மீது ஆண்டுக்கு 4 சத விதம் வட்டி அளிக்கிறது. தவணை டெபாசிட்டுகளானால் 7 சத விதம் வரையில்கூட வட்டி கொடுக்கப்படுகிறது.

**தி பாங்க் ஆப் இந்தியா லிட்.**

T. D. கன்ஸாரா
ஜெனரல் மானேஜர்



YOU HAVE A FUTURE IN THIS STAR

RAAS/B/89

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, புரட்டாசி 29 - அக்டோ. 15





கழுதை கத்தியது. புது மணமான கணவன் தன் மனைவியைப் பார்த்து, ''உன்னுடைய உறவினர்களில் யாரோ உன்னை அழைக்கிருர்கள்'' என்ருன்.
மனைவி உடனே, ''அப்படியானுல் உங்களைக் கல்யாணம் செய்து கொண்டபின் ஏற்பட்ட உறவாகத்தான் இருக்க வேண்டும்!'' என்ருள்.

— லட்சுமி சீனிவாசன்

மதுவிலக்கு
நீடிக்கும்
தி.மு.க.
மதுவிலக்கு
ஒழிக
காங்கிரஸ்
மதுவிலக்கு
ஒழிக
அரசாங்க-
-ங்கள்
PK


ஐக்கிய இந்தியா
மொரார்ஜி
திரிகுண
சேன்
நாசவேலைக்
கம்பெனி
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

மலர் 27 ★ இதழ் 11



# வேர் காய்ந்தால் மரம் வளருமா?

அரசியல் சாஸனத்தின்படி வலு வாய்ந்த அமைப்பாக நிறுவப்பட்ட மத்திய சர்க்காரை இருபதாண்டு காங்கிரஸ் ஆட்சி, மேலும் அதிகார முள்ளதாக்கி விட்டது. இந்த அதிகார பீடத்தின் லகான் இன்னமும் காங்கிர ஸிடமே உள்ளது. தேர்தலுக்குப் பின் காங்கிரஸ் எவ்வளவுதான் பல மிழந்திருந்த போதிலும் — பாழான போதிலும் — தேசத்தின் மைய நிறு வனம் இன்னும் அதன் கையிலேயே இருப்பதை மறப்பதற்கில்லை. இந்தக் கட்சியின் அடிப்படைத் தீமையையும் மறப்பதற்கில்லை. காங்கிரஸின் அடிப் படைக் கொள்கை என்ன? சர்க்கார் சர்வாதிபத்தியம். கம்யூனிஸ்ட்களின் அடிப்படைக் கொள்கையும் சர்க்கார் சர்வாதிபத்தியம்தான். 'தேச வாழ்வு முழுவதையும் கையில் போட்டுக் கொண்டு எல்லாவிதச் செலவுகளையும் சர்க்காரே ஏற்று இஷ்டம் போல் செய்ய வேண்டும்; ஆனால் மக்கள் இதைப் பற்றிக் கேள்வி கேட்கக் கூடாது. உண்மையுடன் உழைக்குமாறு அவர் களிடம் உண்மையும் உழைப்பும் அற்ற தலைவர்கள் செய்யும் 'உபதேச'த்தைக் கேட்க வேண்டியதே மக்கள் கடமை' — இதுதான் நாம் பார்த்து வரும் சர்க்கார் சர்வாதிபத்தியம். இந்தக் கொள்கையை இவ்வளவு காலம் அமுல் செய்து வந்த தில் காங்கிரஸ் கட்சியின் நலன்கள்தாம் அபிவிருத்தி கண்டுள்ளனவே யன்றி, நாட்டு நலன்கள் சிறிதும் முன்னேற வில்லை. அதாவது நடைமுறையில் காங் கிரஸ் கொள்கை தோற்று விட்டது.

வாழ்க்கையின் உயர்தரத்திலுள்ள வர்களும் சரி, உடலால் உழைத்துச் சேரி மக்களின் வாழ்க்கை மட்டத்தி லுள்ளவர்களும் சரி — இருவருமே இயற்கை விதிப்படி நடக்கும் மானுடர் தாம். இவர்களால் தேசம் அபிவிருத்தி யாக வேண்டுமாயின் இவர்கள் இயற்கையான மானுடப் பண்பு களுக்கு ஏற்ப நடந்து கொள்வதற்குச் சுதந்திரம் பெற்றிருக்க வேண்டும். தங்களது உழைப்பாலோ முதலீட் டாலோ தங்களுக்குப் போதிய லாபம் கிடைக்கும் என்ற நிலை இருந்தா லொழிய அவர்களிடமிருந்து செயலாற்ற லையோ ஈடுபாட்டையோ எதிர்பார்ப்ப தில் பொருள் இல்லை. இந்த உண் மையை ஏற்க மறுக்கின்றனர் காங் கிரஸாரும் கம்யூனிஸ்ட்களும். சர்க் காரின் சர்வாதிபத்தியக் கொள்கை யால் தங்களுக்கு ஏதோ லாபம் கிடைக் கும் என்று ஏழை மக்கள் பிரமை கொள்ளுமாறு செய்து அவர்களுடைய ஆதரவைப் பெறுவதிலேயே இவ்விரு கட்சிகளும் முனைந்துள்ளன.

உற்பத்தியைப் பெருக்க வேண்டு மானால் முதலீடு பெருக வேண்டும். அவ்வாறு தொழில்களிலும் விவ சாயத்திலும் முதலீட்டைப் பெருக்க ஊக்கம் தருவது சுதந்திரக் கட்சியின் கொள்கைகளே. முதலீட்டாளருக்குத் திருப்தியளிக்கும் முறையில் உற்சாகம் தருவதால் பொது மக்களே பயன் பெறுகிறார்கள். ஏனெனில், முதலீடு பெருகி தொழில் அபிவிருத்தியடையும் போதுதான் வேலை வாய்ப்புக்களும் பெருகுகின்றன. அப்போது மக்கள் சர்க்காரின் பல அவசியமற்ற திட்டங் களில் உதவாக்கரை வேலை செய்து சம்பளம் பெறுவது போலன்றி, தேசத் தின் உற்பத்திப் பெருக்குக்கு உதவி புரிந்து, அதற்காக ஊதியம் பெறு கிறார்கள். சேமிப்பும், அதனால் திரளும் மூலதனமுமே இத்தொழில் வளர்ச்சிக் கெல்லாம் ஆதாரம். காங்கிரஸ், கம்யூனிஸ்ட் திட்டத்தின் கீழோ சேமிப்பும், முதலீடும் வேரோடு கல்லி எடுக்கப்படுகின்றன. மக்களிடமிருந்து வசூலித்த வரியை முதலாக்கி, சர்க்கார் சிப்பந்திகளைக் கொண்டே அம்முத லால் தேசத்தின் சகல தொழில்களை யும் செய்ய எண்ணுகிறார்கள். இயற்கைக்குப் புறம்பான இப்பாதை யில் செல்வதன் விளைவாக நாடு

முழுதும் அடிமைக் கூட்டமாவதொன்றே மிச்சமாகும். மக்களை ஏமாற்றிச் செய்த மாயப் பிரமையை அஸ்திவாரமாகவும், அரசியல் சூழ்ச்சியால் அமைந்த ஒரு சர்வாதிகாரத்தை உச்சியாகவும் கொண்ட அமைப்பு இது! உயிருள்ள மக்கள் சமுதாயத்தை உயிரற்ற இயந்திரமாக்கும் திட்டம் இது.

தேச விவகாரம் முழுவதையும் ஒரு தொழிற்கூடமாக்கி, அதற்குச் சர்க்காரை நிருவாக ஏஜென்ஸியாக்குவதற்கு விரும்புகிறார்கள். ஆனால் எந்த நிருவாக ஏஜென்ஸியும் மூலதனம் வற்றிப்போகும் காரியத்தைச் செய்யாது. காங்கிரஸாரோ தேசத்தின் மூலதனம் வற்றிப் போவதற்கே எல்லாம் செய்கின்றனர். கட்டடம் மேலே எழும்ப வேண்டும் என்பதற்காக அடியிலிருந்து மண்ணைப் பறித்து மேலே கொட்டுவார்களா? அடிவாரம் வலுவிழந்தால் கட்டடமே விழுந்து விடாதா? கட்டடத்துக்கு அடிவாரம் வலுவாக இருக்க வேண்டும். மரத்துக்கு வேர் வலுவாயிருக்க வேண்டும். வேரில் ஈரம் சிறிதும் இல்லாமல் அவ்வளவையும் கிளைக்கே அனுப்பி வைத்தால் வேர் காய்ந்து மரமும் விழுந்துவிடும். மக்களின் மூலதனம் என்ற அஸ்திவாரமும் ஆணிவேரும் இல்லாமலே சுபிட்ச மாளிகை, சுபிட்ச விருட்சம் உண்டாக வேண்டும் என்று விரும்புகின்றனர் காங்கிரஸ்காரர்கள். பாங்குகளைச் சர்க்கார் உடைமையாக்குவது, ஆயுள் இன்ஷூரன்ஸ் போதாதென்று பொது இன்ஷூரன்ஸையும் சர்க்கார் எடுத்துக் கொள்வது — ஆகிய நடவடிக்கைகள் தேசத்தின் ஈரத்தை யெல்லாம் உறிஞ்சி அதை வறண்டு போகச் செய்யும் காரியங்களே. தினமும் தனது வாத்து ஒரு தங்க முட்டை போட்டதில் திருப்திப்படாமல் அதன் வயிற்றை அறுத்துப் பார்த்து, அடியோடு நஷ்டமடைந்த மனிதனின் கதையாகத்தான் காங்கிரஸாரும் கம்யூனிஸ்ட்களும் மற்ற பொது உடைமைச் சித்தாந்திகளும் முதலீட்டாளர்களை நடத்தி வருகிறார்கள். அரசாங்கம் என்பது அரசு புரிய வேண்டும் என்பது வாஸ்தவம். ஆனால் அந்த அரசால் நாடு சாகக் கூடாது. நாட்டு மக்கள் உயிர்த் துடிப்புடன் வாழ வேண்டும். அப்படி வாழும் உயிருள்ள நாட்டை உரிய படி ஆளுவதுதான் பெருமை. இதைத்தான் சுதந்திரக் கட்சி கூறுகிறது. மற்ற கொள்கைக்காரர்களுடன் தானும் நாட்டின் ஊழல் நிர்வாகத்தில் பங்குபெற வேண்டுமென சுதந்திரக் கட்சி ஆசைப்படவில்லை. ஐம்பது கோடி மக்களை ஆள்கிறோம் என்ற நிலையற்ற வியாதியில் அது பங்கு கேட்கவில்லை. மக்களை ஆளும் முறை அடியோடு மாறவேண்டும். ஆட்சிபீடத்தில் உள்ளவர்களின் கொள்கை மாற வேண்டும், உள்ளார்ந்த ஆற்றல் படைத்த இந்திய மக்களை அடிமைகளாக்காமல் அவர்களின் சக்தியை வெளிப்படுத்தச் செய்து, அதனால் நாட்டை முன்னேற்ற வேண்டும் என்ற இலட்சியத்துக்காகவே சுதந்திரக் கட்சி இயங்குகிறது.

# தென் சென்னைத் தேர்தல்

திரு அண்ணாதுரை மாநில முதலமைச்சப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, தமது மக்கள் சபை ஸ்தானத்தை விட்டுவிட்டதால் தென் சென்னையில் மீண்டும் மக்கள் சபைக்கான தேர்தல் நடக்கிறது. நரகாசுரனை அழித்த தீபாவளிக்கு இரண்டு தினங்களுக்குப் பிறகு நிகழும் இத்தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு மக்கள் தோல்வி தருவார்கள் என்பது திண்ணம். தி. மு. க. முன்பே பெருவாரியான வாக்கு பெற்ற தொகுதி இது. தி. மு. க. ஆட்சிக்கு வந்த பின்னரோ மக்களின் மதிப்பில் மேலும் ஓங்கி வந்திருக்கிறது. அதன் வேட்பாளராக நிற்கும் திரு மாறன் அவர்களோ மக்களின் பேரன்புக்குப் பாத்திரமான பண்பாளர். மெத்தப் படித்தவர். கலைஞர். நாட்டின் நன்மைக்கான திட்டங்களை முரசொலித்து வருபவர். துடிப்புள்ள இளைஞர். போராட்டங்களில் அநுபவம் பெற்றவர். சொல்லாற்றல் மிக்கவர். எனவே தேர்தல் முடிவு அவருக்குச் சாதகமாக இருக்குமென உறுதி கொள்ளலாம். இத்தேர்தலைக் கௌரவமான முறையில் நடத்த திரு அண்ணாதுரை அவர்கள் மனப்பூர்வமாக விரும்புகிறார். தேர்தல் பிரசாரத்தில் கண்ணியமும் கௌரவமும் கட்டுப்பாடும் காட்டுவதில் அவர் முனைந்திருக்கிறார். இந்த நல்லுணர்வைக் காங்கிரஸ்காரர்களும் ஏற்றால் தென் சென்னைத் தேர்தல் தேசத்துக்கே வழிகாட்ட முடியும்.

# ராஜாஜி கலந்துகொள்ளவில்லை!

சுதந்திரக் கட்சியின் தேசிய நிர்வாகக் குழு சென்னையில் சென்ற மாதம் 29, 30 தேதிகளில் நடைபெற்றது. முதலில் இக்குழுவின் கூட்டம் தில்லியிலோ, பம்பாயிலோ நடப்பதாக இருந்தது. இவ்விரண்டு இடங்களுக்கும் தாம் வர இயலாதென்றும், தாம் இல்லாமலே இனி சுதந்திரக் கட்சிக் குழு செயலாற்ற முற்பட வேண்டும் என்றும் ராஜாஜி கூறிவிட்டார். ஆயினும் சுதந்திரக் கட்சியின் நிர்வாகக் குழு அங்கத்தினர்கள் ராஜாஜியின் யோசனைகளைப் பெறாமல் நிர்வாகக் குழு எப்படிச் செயல்பட முடியும் என்று கருதினர். ஆகவே, ராஜாஜி செயற்குழுக் கூட்டத்துக்கு வர இயலாவிட்டால் என்ன, ராஜாஜி இருக்கும் இடத்துக்குச் செயற்குழுவைக் கொண்டு செல்வது என்று முடிவுசெய்து சென்னையில் கூட்டம் நடத்தினர். ஆயினும் ராஜாஜி தாம் முதலில் செய்த முடிவை மாற்றிக் கொள்ளவில்லை. முதல் நாள் மட்டும் செயற்குழுக் கூட்டத்துக்கு

வந்து சுமார் ஒரு மணி நேரம்இருந்து விட்டுப் போய் விட்டார். மற்ற நடவடிக்கைகளிலும் சர்ச்சைகளிலும், முடிவுகளிலும் ராஜாஜி பங்கு கொள்ளவில்லை. இவ்வாறு ராஜாஜி விலகி நின்றறிருந்தும் கட்சியின் சிறப்பைத் தெரிந்து கொள்ள நல்ல வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

ஆட்சி மொழி விஷயத்தில் சுதந்திரக் கட்சியில் எப்பொழுதுமே இரண்டு கருத்துக்கள் நிலவின. உத்தரப் பிரதேசம், பஞ்சாப் போன்ற பகுதிகளைச் சேர்ந்த சுதந்திரக் கட்சித் தலைவர்கள் ஆங்கிலமே ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும் என்ற ராஜாஜியின் கருத்தை ஏற்கத் தயங்கி வந்தனர். ராஜாஜி கூறுவதில் பொதிந்துள்ள நியாயத்தை அவர்கள் உணர்ந்தாலும் அதைத் தங்கள் மக்கள் மத்தியில் வைத்து ஏற்கும் படி செய்வது கடினம் என்று வாதித்து வந்தனர். ஆகவே, சுதந்திரக் கட்சி சாஸனத்தின் 21வது கொள்கைப்படி ஆட்சி மொழி விஷயத்தில் அவரவர் மனச்சாட்சிப்படி நடந்து கொள்ள உரிமையளிக்கப் பட்டிருந்தது. கட்சி அடிப்படையில் நிர்வாகக் குழு எந்தவித முடிவும் யோசனையும் தெரிவிக்க முடியாதிருந்த இந்த நிலை சமீபத்தில் சென்னையில் நடந்த செயற்குழுக் கூட்டத்தில் மாறியது. பாட போதனை பற்றியும், திட்டவட்டமான முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

ஆட்சி மொழி சம்பந்தமாக நேருஜி தென்னக மக்களுக்கு அளித்த உறுதிமொழியை இன்றைய பாரத சர்க்கார் நிறைவேற்ற வேண்டும் என்பது ஒரு தீர்மானம். சர்வகலாசாலைகளிலும், தொழிற் கல்லூரிகளிலும் போதனை மொழி எந்த மொழியாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றி முடிவு எடுக்கும் பொறுப்பு சர்வ கலாசாலைகளுக்கே இருக்க வேண்டும் என்பது இன்னொரு தீர்மானம். இவ்விஷயத்தில் அரசாங்கம் பிரவேசித்து சர்வகலாசாலைகளின் உரிமைகளைப் பறிக்கக் கூடாது என்று நிர்வாகக் குழு எச்சரிக்கை செய்திருக்கிறது. சர்வகலாசாலை அத்யட்சகர்கள், பொறி இயல் விஞ்ஞான வளர்ச்சிக்கு ஆங்கிலமே அவசியம் என்பதை உணர்ந்து நடந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கையைக் குழு தெரிவித்துள்ளது. இத்தகைய முடிவுகளை ராஜாஜி இல்லாத கூட்டத்தில் அகில இந்திய சுதந்திரக் கட்சித் தலைவர்கள் எவ்விதக் கட்டுப்பாடுமின்றிச் சுதந்திரமாக எடுத்திருக்கிறார்கள். சுயமாகச் சிந்தித்து, நியாயமான முறையில் நடந்து கொள்ளும் ஒரு சீரிய கட்சி சுதந்திரக் கட்சி என்பதை நிலைநாட்டி விட்டார்கள்.

# வங்கத்தில் குழப்பம்

**கா**ங்கிரஸின் அமைப்பு வங்காளத்தில் எப்படி அமையப்போகிறது என்பது இன்று நாட்டின் பிரச்னையல்ல. அங்கு பிரதேச காங்கிரஸுக்குப் புத்துயிர் தருவதாலோ, அல்லது அதைக் கலைத்து இடைக்கால நிர்வாகக் குழு அமைப்பதாலோ எவ்வித விசேஷ நன்மையோ தீமையோ விளையப் போவதில்லை. காங்கிரஸில் ஏற்பட்டுள்ள ஊழலுக்கு வங்கம் இன்னுமொரு அழுத்தமான அத்தாட்சி தருகிறது என்பது தவிர இவ்விஷயத்தில் முக்கியத்துவம் எதுவும் இல்லை. இதைவிட அங்கு கவனிக்க வேண்டிய ஆபத்தான பிரச்னை கம்யூனிஸ்ட்களின் போக்கேயாகும். கிழக்குப் பாகிஸ்தான் எல்லைக்கும், மேற்கு வங்கத்தின் எல்லைக்கும் அருகேயுள்ள சிக்கிம் பகுதியில் நாது லா சோ லா முதலிய இடங்கள் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தவை. இங்கே சீனர்களின் வாலாட்டம் அதிகரித்து வருகிறது. அவர்கள் துராக்கிரகத்திலும் துப்பாக்கிப் பிரயோகத்திலும் இறங்கும் அதே தருணங்களில்

### காமகோடியின் கருணைமொழி



பொதுவாக இந்தப் பாரத தேசத்தில் ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு பிராந்தியத்தில் ஒவ்வொரு விதமான சீதோஷ்ணம் இருக்கிறது. ஆனால் சரத் காலத்தில் மட்டும் தேசம் முழுதும் ஒரேவிதமான சீதோஷ்ணமாக இருக்கிறது. சீதோஷ்ணத்தில் பேதமேயில்லாமல் சமரஸமாக இருக்கிறது. எங்கு பார்த்தாலும் நல்ல வெண்மையான மேகங்கள்; சூரியப் பிரகாசம் சாந்தமாக இருக்கிறது; அஸ்தமித்தபின் எப்போதையும்விட வெண்மையான சரத்சந்திரனின் நிலவு நிலவுகிறது. வெளி உலகில் சம நிலையும் வெண்மையும் சாந்தமும் குளிர்ச்சியும் தெளிவும் சேர்ந்து வித்தையின் அதிதேவதையான சரஸ்வதியின் ஸ்வரூபமாகவே விளங்குகிறது. வெளிஉலகம் இவ்வாறிருக்கையில் உள்ளத்தை நாம் தன்மயமாக்கினால் உள்ளும் புறமும் ஒன்றாகி, சுலபமாக அநுக்கிரக சக்தி பெறலாம். இதற்காகவே இந்தக் காலத்தில் சரஸ்வதி பூஜை செய்கிறோம்.

சொல்லி வைத்தாற்போல் மேற்கு வங்கத்திலும் ஏதேனுமொரு வேலை நிறுத்தமோ, கிளர்ச்சியோ ஏற்பாடு செய்யப்படுகிறது. இந்நிலையில் கம்யூனிஸ்டுகளின் கூட்டணி சர்க்கார் அங்கு ஆட்சியிலிருப்பது தேச நலனுக்கு உகந்ததா என்பதே பெரிய கேள்வி.

சர்க்காரிலிருந்து விலக எண்ணம் கொண்ட முதன் மந்திரி அஜாய் முகர்ஜி விதித்த நிபந்தனைகளைக் கம்யூனிஸ்ட்டுகள் ஏற்று அவர் பதவியிலேயே இருக்கச் செய்துள்ளனர். பெருமை மிக்க காங்கிரஸ் தலைவராக இருந்து இன்று வங்காள காங்கிரஸின் ஜீவநாடியாக இருக்கும் அவர் கம்யூனிஸ்ட்களுடன் கூட்டுச் சர்க்கார் நடத்துவதைச் சிரமமாகத்தான் உணருவார். என்றாலும் இந்தச் சிக்கலைக் கட்சி நலனுக்காகப் பயன்படுத்திக்கொண்டு அங்கே காங்கிரஸ் ஆட்சியை ஏற்படுத்துவதற்காக மிகவும் இழிய முறையில் யத்தனம் செய்யப்பட்டது அவமானகரமாகும். பிரதமர் இந்திரா காந்தியும் உள்துறை அமைச்சர் ஸ்ரீ சவானுமே அஜாய் முகர்ஜியைக் காங்கிரஸுக்கு அழைப்பதில் செய்த முயற்சிகளைப் பற்றி அவர் வெளியிட்டுள்ள தகவல்கள் வெட்கப்படும்படி உள்ளது.

வங்கச் சிக்கலை எப்படியும் தீர்த்தாக வேண்டும். எப்படித் தீர்ப்பது என்பதே கேள்வி.

# என்ன சேதி?

## வழக்கறிஞர்கள் குரல்

நாட்டில் நிலவும் நீதிநிர்வாக ஐக்கியத்தை மொழிப்பிரச்னையால் குலைக்காதீர்கள் என்று டில்லி சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆங்கிலத்தின்மேலுள்ள பற்றுதலால் அல்ல; எப்பகுதியைச் சேர்ந்த மக்களுக்கும் சமமாக நீதி வழங்கப்பட வேண்டும் என்ற காரணத்துக்காகவே. இதுகாறும் ஹைகோர்ட்டுகளிலும் சுப்ரீம் கோர்ட்டுகளிலும் ஆளப்பட்டு வந்துள்ள ஆங்கிலத்தைக் கைவிட வேண்டாம் என்று திரு எம். எஸ். செதல்வாட், என். ஸி. சட்டர்ஜி போன்ற புகழ் பெற்ற வழக்கறிஞர்கள் விடுக்கும் குரல் டில்லி மந்திரிகள் காதில் விழுமா?

## ஹிந்திப் பிரதேச மாணவர்கள்

லக்னௌ சர்வகலாசாலை மாணவர்களுக்கு ஒரு சலுகை அளிக்கப்பட்டது. அவர்கள் விரும்பினால் ஆங்கிலம் படிக்கலாம், இல்லையேல் படிக்காமலே இருக்கலாம் என்று சர்வகலாசாலையில் பாடத் திட்டம் வகுத்தது ஆங்கிலத்தை இஷ்ட பாடமாக ஆக்கினார்கள். அவ்வாறிருந்தும் நூற்றுக்குத் தொண்ணூற்றைன்பது மாணவர்கள் ஆங்கிலத்தைப் படிக்க விரும்புவதாகத் தெரிவித்து அம்மொழிப் பயிற்சியை ஏற்றுக் கொண்டுள்ளனர்.

ஜயப்பூரில் 'ஆங்கிலத்தைப் படிக்கச் சொல்லி வற்புறுத்தாதீர்கள். இஷ்ட பாடமாகச் செய்யுங்கள்' என்று கிளர்ச்சி நடத்தினார்கள். சர்வ கலாசாலை பணியவில்லை. மூன்றாண்டுப் பட்டப் படிப்பில், முதலாண்டு கட்டாயமாக ஆங்கிலம் படிக்க வேண்டும் என்று வற்புறுத்தித் தீர்மானம் செய்தது. கிளர்ச்சி செய்த மாணவர்கள் விவேகம் பெற்று ஒழுங்காக வகுப்புக்களுக்குச் செல்லத் தொடங்கியிருக்கின்றனராம். மாணவருலகமும் சர்வகலாசாலைகளும் எதிர்கால நலனை உணர்ந்து ஆங்கிலம் வேண்டும் என்பதில் கருத்தோடிருந்து வருகின்றன. அரசாங்கம் மட்டும் கண்ணிருந்தும் குருடாய், காதிருந்தும் செவிடாய் இயங்கி வருவதே வியப்பாக இருக்கிறது.




காச்மீரத்தின் முன்னாள் பிரதமரான ஷேக் அப்துல்லாவின் மீது விதிக்கப்பட்டுள்ள எல்லாக் கட்டுப்பாடுகளையும் நீக்கி, அவரை நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டும் என 253 பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் மகஜர் விடுத்துள்ளனர். மக்கள் சபை அங்கத்தினர் 195 பேரும், ராஜ்ய சபை அங்கத்தினர் 58 பேரும் இம்மகஜரில் கையெழுத்திட்டுள்ளனர். இவர்கள் பல்வேறு கட்சிகளைச் சேர்ந்தவர்கள்.

ஷேக் அப்துல்லாவை நீண்ட காலமாகக் கைதியாக வைத்திருப்பது சர்வ தேசங்களிலும் நமக்கு அவமானத்தை உண்டாக்கியுள்ளது. சட்டத்தின் ஆட்சியை மதிக்கும் நீதி நிபுணர்களும், எல்லாப் பிரச்னைகளையும் அமைதியான முறையில் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பும் நடுநிலைமையாளரான அரசியல் நிபுணர்களும் இதை ஒரு வெட்கக் கேடாகவே கருதுகின்றனர். இந்நிலையை இந்திய சர்க்கார் உணரத் தவறுவது மிகவும் வருத்தத்துக்குரியது.

ஃஃஃ

இந்தியா பாகிஸ்தான் இரு நாடுகளும் நட்புடன் வாழவேண்டியவை. அவை அப்படி வாழவே விரும்புகின்றன. இவ்விரு நாட்டு அரசாங்கங்களும் அவ்வாறே விரும்புகின்றன. எனினும் நட்பு என்ற இந்தப் பொது இலக்கை அவை பின்பற்ற முடியாதபடி காச்மீரப் பிரச்னை குறுக்கிடுகிறது. முன்பு பிரிட்டிஷ் ராஜ்யத்தினால் பாதுகாக்கப்பட்ட ஒரு சமஸ்தானத்தின் அரசியல் அந்தஸ்து நிர்ணயிக்கப்படாததன் காரணமாக இரு பெரிய நாடுகள் நட்புக் கொள்ள முடியாமலிருப்பது துர்ப்பாக்கியமாகும். சம்பந்தமில்லாத ஒரு பிரச்னையானது நகர்த்த முடியாத பாறாங்கல் போல் வழி மறிக்கிறது.

காச்மீரப் பிரச்னையை ஒதுக்கி வைத்துவிட்டு இந்தியாவுடன் பாகிஸ்தான் நேசத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று பாகிஸ்தானுக்கு ருஷியா புத்திமதி சொல்லியிருப்பதாக ஹிந்துப் பத்திரிகைச் செய்தி ஒன்று கூறுகிறது. கம்யூனிஸ சர்க்கார்களின் கூற்றுக்களுக்கு எவ்வளவு மதிப்புக் கொடுக்கலாம் என்று சொல்ல முடியாது. கம்யூனிஸ்ட் சர்க்கார்களின் தகவல்களைப் பத்திரிகைக்காரர்கள் சேகரித்து வெளியிடுவதிலும் பல இடைஞ்சல்கள் உண்டு. இவை எப்படியாயினும் மேலே கண்ட தகவல் சரியாயின் அதுவே சரியான பாதையாகும். சரியான மார்க்கத்தைக் காட்டும் ஒரு விஷயம் பலபேரறியப் பிரகரமாவதே நல்லதுதான். எண்ணங்கள் பரவப் பரவத் தானாகவே மக்கள் செய்கையும் அதற்கேற்ப உருவாகும்.

ஃஃஃ

'வருமானம் எல்லாம் சர்க்காருக்குச் செல்ல வேண்டும்; நாட்டின் செலவுகள் எல்லாம் சர்க்கார் கஜானாவிலிருந்தே செய்யப்பட வேண்டும்' என்ற கருத்தின் மீதுதான் பொது இன்ஷூரன்ஸையும் சர்க்கார் உடைமையாக்க எண்ணுகிறார்கள். இந்தக் கொள்கையின் விளைவாக சர்க்கார் ஒரு சர்வ சக்தி வாய்ந்த முதலாளியாகவும் மக்கள் யாவரும் கூலி வேலைக்காரர்களாகவும் ஆவர். காங்கிரஸின் சர்க்கார் உடைமைக் கொள்கையை ஆட்சேபித்துச் சென்னையில் கூடிய சுதந்திரக் கட்சியின் தேசிய நிர்வாகக் குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

ஃஃஃ

கார்ல் மார்க்ஸ் எழுதிய பிரபல நூலான 'டாஸ் காபிடலி'ன் நூற்றாண்டு இது. ஹனோவர் பத்திரிகை ஒன்றில் எழுதும் பேராசிரியர் ஆஸ்வால்ட் வான் நெல்ப்ருனிங் கூறுகிறார்: ''இப்போதுள்ள கம்யூனிஸ்டுகள் உண்மையான மார்க்ஸின் கருத்துக்களிலிருந்து பொருள் பெறவேயில்லை. ஒவ்வொரு சமயத்திலும் மார்க்ஸீயம் என்று எதையோ ஒன்றைச் சொல்லி அதைக் காப்பதற்கே அவர் பெயரை உபயோகித்து வந்துள்ளனர். ஒருவர் இடுகாட்டிலிருந்து மீண்டும் எழும்பக் கூடுமாயின், இன்று லண்டனிலுள்ள ஹைகேட் இடுகாட்டிலிருந்து மார்க்ஸ் எழும்பி, 'நான் ஒரு மார்க்ஸீயவாதி அல்ல' என்று கதறுவார்.''

உண்மையில் மார்க்ஸ் இன்றைய மார்க்ஸீயவாதி அல்ல. அவர் கார்ல் மார்க்ஸ்தான். அவரது இதயத்துள் இரண்டு ஆன்மாக்கள் இருந்தன. எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்க்கும் நிதான ஆன்மா ஒன்று; புரட்சிக்குத் துடிக்கின்ற ரத்தம் கொதிக்கும் ஆன்மா இன்னொன்று.

ஃஃஃ

கார்ல் மார்க்ஸ் இன்று உயிர் பெற்று வந்தால் 'நான் மார்க்ஸீயவாதியல்ல' என்று அலறக் கூடுமென்பது போலவே, காந்தியடிகளும் இன்று உயிர் பெற்றால் அவரது பெயரைக் காட்டித் தங்கள் அதிகாரத்தை நிலைநாட்டிக் கொள்ளும் காங்கிரஸ்காரர்களிடம் ''நான் உங்களைச் சேர்ந்தவன் அல்ல'' என்று அலறுவார்.

ஃஃஃ

பொதுத் தேர்தல்களிலிருந்து காங்கிரஸ் படிப்பினை பெறவில்லை என்று பிரதமர் அலகாபாத்தில் பேசியுள்ளார். காங்கிரஸின் எதிர்காலம் குறித்து எச்சரிக்கையும் விடுத்துள்ளார். ஆனாலும் மதகுருவிடம் ஒருவர் தமது பாவத்தைக் கூறுவது போல் பிரதமர்

தமது கட்சியின் தப்பிதத்தை வெளியிடுவதால் பயனேற்பட்டு விடாது. பிரதமர் தம் கட்சித் தவற்றைச் சொல்வது எவ்விதத்திலும் அக்கட்சிக்கு ஆன்மிக மருந்தாகப் பயன்பட்டு அதைச் சீர்திருத்திவிடாது. பிரதமர் செய்ய வேண்டியது தவறுகளைச் செம்மை செய்வதே. அதிகாரத்தை விடாமல் பிடித்துக் கொண்டிருப்பதில் காங்கிரஸ்காரர்களின் பேராசை இன்னும் குறையவில்லை. அதிகாரத்தை வலுப்படுத்திக் கொள்ளும் முறையிலேயே கொள்கைகள் வகுக்கப்பட்டுள்ளன. இவை காங்கிரஸ் கஜானாவை நிரப்பும் அதே சமயத்தில் நாட்டுப் பொருளாதாரத்தை நாசமாக்கியுள்ளன.

இயற்கை விதியைப் புறக்கணித்து விட்டுப் பொருளாதார முன்னேற்றம் அடைய நினைப்பது தவறு என்பது இன்றளவும் உணரப்படாததே காங்கிரஸின் மிகப் பெரும் தவறு. ருஷியாவின் சிக்கலான சர்க்கார் சர்வாதீன அமைப்பில் கூட ஓரளவுக்கு இத்தவற்றை உணர்ந்து சில மாறுபாடுகள் செய்துள்ளனர். இதற்கு எவ்வளவோ அதிகமாகக் காங்கிரஸால் செய்ய முடியும். அப்படிச் செய்து இந்தியாவை உண்மையான இந்தியாவாக்க முடியும். ஆனால் இதற்கு நேர்மையும், அதிகார ஆசையைத் தியாகம் செய்யும் உணர்வும், சுயநலக் கலப்பற்ற தெளிந்த சிந்தனையும் அவசியமாகும்.

ஃஃஃ

நேரு அவர்களின் சோஷலிஸ சிந்தனையைத் தூண்டிவிட்டவர்களில் ஸிட்னி வெப் ஒருவர். அவர் 1920ல் தொழிற் கட்சி மகாநாட்டில் தலைமை உரை நிகழ்த்துகையில் எதையும் மெல்ல மெல்லச் சீராகச் செய்ய வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார். வேறு பலரும் நிதானமாகச் செயலாற்றுவதைச் சொன்னாலும் ஸிட்னி வெப் சொல்வதில் விசேஷம் உண்டு. இப்போது எந்தப் புது அரசியல் கட்சி தோன்றினாலும் அது ஏதாவதொரு புரட்சிக் கட்சி அல்லது புரட்சிக் குழு என்றே பெயரிடப்படுகிறது. க்ராந்தி தளம் என்று பெயரிடுவதும் இதே பொருளைத்தான் காட்டுகிறது. வெகு வேகமாகக் காரியம் செய்து புரட்டிவிட வேண்டும் என்பதே புரட்சி. இப்படிப் பெயர் சூட்டினால் உடனே துன்பப்படும் மக்களின் மனத்தைக் கவர்ந்துவிடலாம் என்பது இக்கட்சிகளைத் தோற்றுவிப்பவர்களின் எண்ணம். சரியான மருத்துவம் தெரியாதவர் செய்யும் மருந்துக்கு எவ்வளவு பெரிய பெயர் தந்தாலும் அதைக் கொண்டு சிறிது காலத்துக்குத்தான் ஏமாற்ற முடியும். பிறகு வெறும் பெயரோடு நின்றுவிட வேண்டியதே.

இயற்கை நிதானமாகத்தான் செயலாற்றுகிறது. அந்தப் போக்கை நாமும் தவிர்க்க முடியாது. இது பிற்போக்குக் கொள்கை என்று தோன்றலாம். அப்படியாயின் நேருவின் குருமார்களில் ஒருவராகவே மதிக்கப்படுபவரின் கருத்தும் இதுவே என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

இந்தியாவில் உள்ள சோஷலிஸக் கட்சிகளுக்கும், பிரிட்டனின் சோஷலிஸக் கட்சிக்குமுள்ள மாறுபாட்டை 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பணிச்சென்று எடுத்துக் காட்டியுள்ளது. தொழிலதிபர்களிடம் துவேஷம், ஊதியத்தை உயர்த்தக் கோஷமிட்டு அதன் மூலம் உற்பத்தி விலையை உயர்த்துவது, இதன் விளைவாக மக்கள் உபயோகிக்கும் பொருட்களின் அளவைக் குறைப்பது, எல்லாத் தொழில்களையும் சர்க்கார் உடைமையாக்குவது — இவையே இந்திய அரசியலில் காணும் சோஷலிஸம். இதன் பலனாக முதலீடு செய்யக் கூடியவர்கள் தொழில்துறையில் பணம் போடவே பயப்படுகிறார்கள். மூலதன மார்க்கெட் மூச்சுத் திணறுகிறது. ஆனால் பிரிட்டனில் உள்ள சோஷலிஸ்ட் சர்க்காரோ முதலீடுகளைத் தீவிரமாக ஊக்குகிறது. என்றுமே கண்டிராத அளவுக்கு அங்கு பங்குகளின் விலைகள் கூடியுள்ளன.

ஃஃஃ

கான்பூரிலிருந்து ஸ்ரீ எஸ். பி. மேரா 'ஹிந்து'ப் பத்திரிகையில் எழுதுகிறார்: ''நான் ஒரு வட இந்தியன். இன்று உத்தரப் பிரதேசம் எனப்படும் ராஜ்யத்தில் பிறந்து வளர்ந்தவன். ஹிந்தி என் தாய்மொழி. எனினும் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இந்தியா முழுவதிலும் இருக்க வேண்டும், ஹிந்தியல்ல என உறுதியாகக் கருதுகிறேன். உயர்படிப்புக்கு ஆங்கிலத்தைக் கைவிடுவது ஏற்கனவே சிதிலமாகி வரும் இந்திய ஒற்றுமைக்கு மேலும் ஊறு விளைவிக்கும் எனக் கருதுகிறேன்.... ஆங்கிலம்தான் வேண்டும் என்பதை இன்னும் வெளிப்படையாக அடித்துச் சொன்னாலே இன்று புறக்களுக்கும் ராஜாஜிகளுக்குமிடை ஏற்பட்டுள்ள சிக்கலான நிலை தீரும்.''

ஃஃஃ

அமெரிக்க அரசாங்க சுகாதார இலாகாவில் தலைமை சர்ஜனாக இருந்த டாக்டர் லூதர் டெர்ரி கூறுகிறார்:

> சிகரெட்டால் தீமை விளைகிறதா இல்லையா என்பதைப் பற்றி ஐயப்பட்ட காலம் முடிந்து விட்டது. சிகரெட் பிடிப்பவருக்கு அது நிச்சயமாக ஆரோக்கியக் குறைவை உண்டாக்குகிறது என்பதில் இனி எவ்விதச் சந்தேகமும் இல்லை. இது ஒரு 'சர்ச்சையாக'வும் வாதத்துக்குரிய விஷயமாகவும் இருந்த நாட்கள் முடிந்துவிட்டன என்பதே என் கருத்து. பல தலை உள்ள பயங்கர மிருகம் போல் பரவியுள்ள சிகரெட் தீமையை எதிர்த்துப் பொது நிலையங்களும், சமூகக் குழுக்களும், தனிமனிதர்களும் செயலில் இறங்க வேண்டிய சகாப்தத்தின் நுழை வாயிலில் நாம் இருக்கிறோம்.

ஃஃஃ

ஜனாதிபதி ஜான்சன் அவர்கள் சிகரெட் பிடிப்பதையும் மது அருந்துவதையும் பூரணமாக நிறுத்திவிட்டாராம். இதனால் தாம் முன்னெப்போதும் இல்லாத ஆரோக்கிய உணர்வு பெற்றிருப்பதாகக் கூறுகிறார்.

> இவ்விரு சகோதரர்களின் வாழ்க்கை முன்னேற்றத்தை நான் தொடர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். அவர்களை மிகவும் போற்றி வருகிறேன். இன்று நம்மிடையே உள்ள தலைசிறந்த தேச பக்தர்களில் இவ்விருவரும் இடம்பெறுகிறார்கள். — ராஜாஜி

# ஆர்க்காடு தந்த அபூர்வ சகோதரர்கள்

'**தோ**ன்றிற் புகழொடு தோன்றுக' என்பது வள்ளுவர் வாக்கு. தோன்றுவதென்பதற்குப் பிறப்பது என்று பொருள் கொண்டால் நாம் புகழொடு பிறப்பது நம் கையில் இல்லையே என்று படும். ஆனால் 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்பதற்குச் சமூகத்திடையே ஒரு செயலை மேற்கொண்டு தோன்றும்போதெல்லாம் புகழுக்குரியவர்களாக இருக்க வேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம். இதற்கு இலக்கியம் போல் வாழ்க்கை வரலாறு அமைந்த பெரியார்கள் பலர் நம் தமிழகத்தில் தோன்றியுள்ளார்கள். ஆனால் இரட்டையராகப் பிறந்து, வளர்ந்து, கல்வி கற்று வாழ்க்கையில் வளம் பெற்று, இருவரும் புகழின் உச்சிக்குச் சென்று, நாட்டின் இரு தவப் புதல்வர்கள் என்று மக்கள் போற்றும் வண்ணம் தம் மதிப்பைப் பெற்றுள்ள ஸர் ஏ. ராமசுவாமி முதலியார், டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியாரைப் போன்ற சகோதரர்களைக் காண்பது அரிது. 'ஆர்க்காடு சகோதரர்கள்' என்று கௌரவத்துடன் அழைக்கப்படும் இவ்விருவரையும் வள்ளுவர் வாக்கின் சிறப்பு உதாரணங்களாகத்தான் சொல்ல வேண்டும். இவர்கள் தங்கள் எண்பதாவது வயதை முடித்து 81வது வயதை 1967 அக்டோபர் 14ந் தேதியன்று தொடங்குகிறார்கள். இந் நன்னாளில் அவர்களுக்கு இதயம் நிறைந்த நல்வாழ்த்துக் கூறுகிறோம்.

சிலர் பிறக்கும்போதே புகழுடன் பிறக்கிறார்கள், ராஜ வம்சத்தினரைப் போல. சிலர்மீது புகழ் திணிக்கப்பட்டுப் பிரபலமடைகின்றனர். மற்றும் சிலரைப் புகழ் தானே வந்தடைகிறது. ராமசுவாமி — லட்சுமணசுவாமி சகோதரர்கள் உண்மையிலேயே பெருமை கொள்ள வேண்டிய இந்த மூன்றாவது வகையைச் சேர்ந்தவர்கள்.

ஸர்வஜித்து ஆண்டில் (1887ல்) கர்னூலில் இவர்கள் இரட்டையராகப் பிறந்தபோது புகழுடன் தோன்றவில்லை. தெய்வ பக்தி மிகுந்த இவர்களது குடும்பம் எளிமையான குடும்பம்தான். நம் நாட்டுப் பழக்கத்தின்படி இரட்டைப் பிள்ளைகளான இவர்களுக்கு ராமசுவாமி, லட்சுமணசுவாமி என்று பெயர் சூட்டப்பட்டன. நம் நாட்டுப் பண்பிலும் கலாசாரத்திலும் இவ்விருவரும் ஊறி வளர்ந்தனர். இன்றும் இருவரும் நெற்றியின் மையத்தில் மெல்லிய செந்தூரம் அணிந்துதான் வருகின்றனர். குலதெய்வமாகிய திருப்பதி வேங்கடாசலபதியிடம் மாறாத பக்தி பூண்டவர்கள்.

இருவருமே கல்வியில் அசாதாரண ஊக்கமும் சுறுசுறுப்பும் காட்டினர். மூத்தவர் ராமசுவாமி சட்டக் கல்வி முடித்து வழக்கறிஞராகப் பயிற்சி பெற்றார். ஆனால் கோர்ட்டுக்குச் செல்லவில்லை. அரசியலில் குதித்தார். அந்தக் காலத்தில் — 1920–30 ஆண்டுகளில் — முதல் யுத்த காலத்துக்குப் பின் ஆண்டுகளில் அரசியலில் ஜஸ்டிஸ் கட்சி விறுவிறுப்புடன் செயல் பட்டு வந்தது. இக் கட்சியின் சார்பில் தமது நாவன்மையையும் பேனா வன்மையையும் அமோகமாக உபயோகப்படுத்தினார் ராமசுவாமி முதலியார். 'ஜஸ்டிஸ்' பத்திரிகையின் ஆசிரியராகவும் பணியாற்றினார். அக்காலத்தில் அவர் சட்ட மன்ற உறுப்பினர். அவரது பேச்சுத் திறன் அசாதாரணமானது. பிரசங்க மேடைகளிலும், சட்ட மன்றத்திலும் இவருடைய பேச்சைக் கேட்கவும், தீரர் சத்தியமூர்த்திக்கும் ராமசுவாமி முதலியாருக்குமிடையே

**1948ல் ஹைதராபாத் பிரச்னையை விவாதிப்பதற்காகக் கூடிய ஐ. நா. பந்தோபஸ்துக் குழுவில் ஏ. ராமசுவாமி முதலியார்**





தென் கிழக்காசிய வைத்திய நிபுணர்களுடன் ஏ. எல். முதலியார்



முன்பு ஐ. நா. வின் பொதுக் காரிய தரிசியாயிருந்த ட்ரிக்வி லீயும் ஏ. ஆர். முதலியாரும்

நடந்த சொற் போர்களை ரசிக்கவும், கலை நிகழ்ச்சிகளுக்குச் செல்லும் கலா ரசிகர்களைப் போல் மாணவர்கள் செல்வது வழக்கம். அவர் காரசாரமாகப் பேசும் பேச்சிலே இலக்கிய மணமும் கமழும்.

இளையவர் லட்சுமணசுவாமி முதலியார் மருத்துவத் துறையில் தமது கல்வியை முடித்துப் பட்டம் பெற்று மக்கட் பேறு மருத்துவத்தில் மிகத் திறமை யுள்ளவராக விளங்கினர். தமது தாயை இரண்டாவது வயதிலேயே இழந்து விட்டதால், அவருடைய நினைவாகப் பிள்ளைப் பேறு மருத்துவத் துறையில் சகோதரிகளுக்குச் செய்யும் சேவையைத் தமது பெரும் பேறாகவே கருதினர் திரு லட்சுமணசுவாமி முதலியார். தமது பணிக்கு ஏற்ற அமைதி, தொழில் திறமை, அனுதாப உணர்ச்சி, கனிவு முதலிய அருங் குணங்களைக் கடைப்பிடித்து வளர்த்துக் கொண்டார். கட்டுப்பாடும் ஒழுங்கு முறையும் எக்காலத்திலும், எச்சந்தர்ப்பத்திலும் வழுவ அனுமதிக்காதவர். மருத்துவ மனையில் சக டாக்டர்கள் தவறு செய்து விட்டால் கண்டிக்கத் தவற மாட்டார். ஆனல் மனத்தில் யாரிடமும் வெறுப்பை வளர்த்துக் கொள்ளாதவர். 1917ம் ஆண்டிலேயே எடின்பரோ ராயல் மருத்துவக் கல்லூரியின் அங்கத்தினா ஆனர். எழும்பூர் மருத்துவ மனையின் உயர் நிர்வாக அதிகாரியாகவும் பின்னர் சென்னை மருத்துவக் கல்லூரியின் முதலாவது இந்தியப் பிரின்சிபாலாகப் பதவி வகிக்கும் கௌரவமும் லட்சுமணசுவாமி முதலியாருக்குத் தான் கிடைத்தது. அந்தக் காலத்திலேயே சென்னை மருத்துவக் கல்லூரியின் புகழ் வெளி நாடுகளுக்கும் பரவி, மாணுக்கர்கள் கல்வி பயில இங்கே வந்து குவிந்தனர். மருத்துவத் துறையில் உலகத்தில் தலை சிறந்த ஒரு சில நிபுணர்களில் லட்சுமணசுவாமி முதலியார் ஒருவர் என்ற புகழ் இவருக்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே கிட்டியது. இவரது மணி விழாக் கொண்டாட்டத்துக்குப் பின்னர் இவருக்கு ஜீவிய காலத்திலேயே வெண்கலச் சிலையும் நிர்மாணம் செய்யப்பட்டு இவர் கௌரவிக்கப்பட்டார். எட்டு இந்திய சர்வ கலாசாலைகளும் பல வெளிநாட்டுக் கலாசாலைகளும் திரு லட்சுமணசுவாமி முதலியாருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கியுள்ளன.

ஸர் ராமசுவாமி முதலியாரின் புகழ் வேறு துறையில் வளர்ந்தது. சென்னைக் கார்ப்பரேஷனின் தலைவராக இரண்டு ஆண்டுகள் பதவி வகித்தார். அந்தக் காலத்தில் மேயர் என்ற பெயர் அமுலுக்கு வரவில்லை. சுதந்திரத்துக்கு முந்திய சகாப்தத்தில் வைஸ்ராய் கவுன்சிலில் தொழில் துறை அமைச்ச

அன்னி பெஸன்ட், ஷவுகத் அலி ஆகியோரும் ஏ. ஆர். முதலியாரும்



ராக — இப்போதுள்ள மத்திய மந்திரிகளின் அந்தஸ்துக்குச் சமமானது இது — பணியாற்றியுள்ளார். மைசூர் சம்ஸ்தானத்தின் திவானாகவும் ஸர் ராமசுவாமி முதலியார் மிகத் திறமையுடன் நிர்வாகம் நடத்தியுள்ளார். சில காலம் திருவிதாங்கூர் சர்வ கலாசாலை உப அத்யட்சகராகவும் பணியாற்றினார்.

இரு சகோதரர்களுக்குமுள்ள ஒற்றுமை பல அம்சங்களில் குறிப்பிடத் தக்கது. தோற்றத்தில் ஒற்றுமை — (திரு லட்சுமணசுவாமி முதலியார் தமது மீசையை அகற்றிவிட்டதே தமக்கும் தமது அருமைத் தமையனுக்குமிடையே பார்ப்பவர்களுக்குத் தடுமாற்றம் ஏற்படக் கூடாது என்பதற்காக என்று சொல்வதுண்டு); தலைப்பாகையில் ஒற்றுமை; பேச்சுத் திறனில் ஒற்றுமை; புகழில் ஒற்றுமை; தேக ஆரோக்கியத்தில் ஒற்றுமை; மன உறுதியில் ஒற்றுமை — இப்போது சதாபிஷேக விழா எய்தியதிலும் ஒற்றுமை. இத்தகைய அதிசயத்தை நாம் பார்ப்பதும் பாக்கியம்தான்.



பிரிட்டிஷ் ராணியின் சென்னை விஜயத்தின்போது அவருடன் ஏ. எல். முதலியார்

சில அம்சங்களில் வேற்றுமையும் உண்டு. டாக்டர் ராமசுவாமி முதலியார் அரசியலில் ஆரம்பித்து, அதைப் படிப்படியாக விடுத்து, தொழில் துறையில் முழு மூச்சுடன் ஈடுபட்டு இன்று தொழில் வளத்தைப் பெருக்குவதில் தமக்கு ஈடு தாமே என்ற அந்தஸ்தில் இருக்கிறார். டாக்டர் லட்சுமணசுவாமி முதலியார் அரசியலில் புகாமல், அரசியல் கட்சிகளில் சேராமல், மக்கட்பேறு மருத்துவம், கல்வி வளர்ச்சி இவற்றையே தமது பிரத்தியேக அலுவல்களாக வைத்துக்கொண்டிருந்தவர். எனினும் அரசியலில் அவர் வகித்துள்ள பங்கு மகத்தானதென்றே சொல்ல வேண்டும். சென்னை மேல் சட்டசபையில், ஏகபோக அரசு நடத்திய காங்கிரஸ் கட்சிக்கு எதிர்க் கட்சித் தலைவராக அவர் ஆற்றிய பணிக்கும், நிகழ்த்திய சொற்பொழிவுகளுக்கும் இணையே இல்லை. அவர் இடித்துக் கூறும்போதும், நாசூக்காகக் குறைகளை எடுத்துக் காட்டும்போதும், போதனை செய்யும்போதும், புத்திமதி சொல்லும்போதும், அவருடைய பரந்த மனப்பான்மையும், ஆழ்ந்த சிந்தனைகளும், உயர்ந்த அறிவுத் திறனும் சுடர்விட்டுப் பிரகாசித்தன. சென்னை மேல்சபையில் பலமான எதிர்க்கட்சி இல்லாத குறையை டாக்டர் லட்சுமணசுவாமி முதலியார் தனி ஒரு மனிதராக நிறைவு செய்திருக்கிறார்.

இதைப் போலச் சிறப்புடைய, இன்னொரு பணி அவர் சென்னை சர்வகலாசாலையின் உப அத்யட்சகராக ஆற்றிக் கொண்டு வரும் தொண்டேயாகும். ஒன்பது முறை உப அத்யட்சகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, இப்பதவியில் வெள்ளி விழா கொண்டாடப் பெற்ற பெருமை லட்சுமணசுவாமி முதலியார் ஒருவருக்கே உரியது. சென்னை சர்வ கலாசாலையையே ஏ. எல். முதலியார் சர்வ கலாசாலை என்று பெருமிதத்துடன் சொல்லிக் கொள்ளக் கூடிய விதத்தில் அந்த நிறுவனத்தின் நடவடிக்கைகளை நடத்தி வந்துள்ளார். சர்வ கலாசாலையின் சுதந்திரத்தை அரசியல் தலையீடுகளிலிருந்து காப்பதில் அவரது உறுதி பாராட்டுக்குரியது. ஆங்கிலத்தின் அவசியத்தைத் தீரத்துடன் எடுத்தியம்பும் பெருமையும் அவருக்குரியது.

நம் நாட்டில் மட்டுமின்றி உலக அரங்கிலும் இவ்விரு சகோதரர்களும் சிறப்புப் பணி ஆற்றி, தங்கள் கௌரவத்தையும் நாட்டின் கௌரவத்தையும் உயர்த்தியுள்ளார்கள். இதை நாட்டு மக்கள் என்றும் மறக்க மாட்டார்கள்.

சுதந்திர இந்தியாவின் கட்சிச் சார்பு கொண்ட அரசாங்கம் இவ்விரு சகோதரர்களின் அசாதாரணத் திறமையையும், அறிவையும் சேவா உணர்ச்சியையும் தக்க முறையில் பயன்படுத்திக் கொள்ளவில்லை. என்றாலும், நாட்டின் வளர்ச்சிக்கோ, நாட்டின் வளத்துக்கோ இச்சகோதரர்களின் ஆற்றலும் அறிவும் குறைவின்றிக் கிடைத்துக் கொண்டிருப்பதை இச்சந்தர்ப்பத்தில் நெஞ்சாரச் சொல்ல வேண்டும். ஆங்கிலேயப் பிரபுக்களிடம் தமக்குள்ள நட்பையும், தொடர்பையும் நாட்டின் தொழில் வளத்தைப் பெருக்குவதில் ராமசுவாமி முதலியார் வெகு திறமையாக உபயோகித் திருக்கிறார். இந்தியத் தொழில் உலகம் இதற்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறது. இதை ஒருவாறு உணர்ந்து தானோ என்னவோ, இந்திய அரசாங்கம் கூட இவரது சேவையைப் பல கமிட்டிகளில் ஓரளவுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது.

நாட்டுக்குத் தொண்டாற்றிய அருந் தவப் புதல்வர்கள் வரிசையில் திரு ராமசுவாமி முதலியாரும், திரு லட்சுமணசுவாமி முதலியாரும் முன்னணியில் இடம் பெற்றுள்ளனர். அவர்களின் 81வது பிறந்த தினத்தன்று கல்கி அட்டையில் அவர்கள் படத்தை வெளியிட்டு அவர்கள் நீண்ட காலம் பெருவாழ்வு வாழ்ந்து, நாட்டு மக்களுக்கு அவர்களுடைய அறிவும் ஆற்றலும் மேன்மேலும் கிடைத்துக் கொண்டிருக்க இறைவனைப் பிரார்த்தனை செய்கிறோம். வாழ்க ஆர்க்காடு சகோதரர்கள்!

# தீபாவளி விசேஷ

## தீபாவளி புதிய ரக

# பட்டு

**5 புதிய தீபாவளி கலர்கள்!**

- உமா
- மர்பி
- ஆஷா
- மீரா
- சுதா

**4 தீபாவளி புதிய புட்டா டிசைன்கள்!**

இந்த கலர்களுக்குப் புதுமாதிரியான
வைலட், வெல்வெட்
கலர் பார்டர்களில்
6 கஜங்களில் தயார் செய்யப்பட்டுள்ளன

இதற்கு மட்டும் 6 கஜங்களில் க்ரீம் கலர் பார்டரும்
9 கஜங்களில் ஆயில் மஸ்டர்ட் கலர் பார்டரும்
அமைக்கப்பட்டுள்ளது

**7 புதிய தீபாவளி பார்டர் டிசைன்கள்!**

இந்தப் புதிய பார்டர்கள் யாவும்
6 கஜங்களில்
தயார் செய்யப்பட்டுள்ளன

- அக்ரூட்
- பாரிஜாதா
- புஷ்பக்
- யமுனா
- கங்கா
- பாரதி
- மஹேஸ்வரி

இந்த பார்டர் டிசைன் 9½ கஜம் சேலைகளுக்கென்றே பிரத்யேகமாக தயார் செய்யப்பட்டது

இன்று 15 - 10 - 67 ஞாயிற்றுக்கிழமை

விற்பனை உண்டு!



# யாரோ இவர் யாரோ?

'சோ'

## அத்தியாயம் 11

சித்ராவுக்குப் பொழுதே போகவில்லை. பொழுது என்னவோ கவலையில்லாமல் தன் போக்கில் போய்க்கொண்டுதான் இருந்தது. ஆனாலும் சித்ராவுக்குப் பொழுது போகவில்லை. இது ஏன்? பொழுதோடு சேர்ந்து தானும் நகரத் தெரியாத தற்கால மனிதர்கள், பொழுது நகரவில்லை என்று கூறிவிடுகிறார்கள். சித்ரா நகத்தைக் கடிக்க ஆரம்பித்தாள். நகம் போயிற்றே ஒழியப் பொழுது போகவில்லை. ரேடியோவைத் திருப்பினாள் சித்ரா. பொழுது போகாத இன்னொரு ஜன்மம் ரேடியோவில் பேசிக் கொண்டிருந்தது. இந்த ஆசாமிக்கு எப்படி ரேடியோவில் பேச 'சான்ஸ்' கிடைத்தது என்று சித்ரா யோசிக்கலானாள். அந்தப் பேச்சுக்கு அர்த்தம் எதுவும் இருப்பதாகவே தெரியவில்லை. பேச்சு நின்றது. அறிவிப்பாளர் குரல் கேட்டது. ''இது வரை பாடியது...'' என்று ஒரு பெயரைச் சொன்னார் அறிவிப்பாளர். அப்போதுதான் சித்ராவுக்கு இத்தனை நேரம் ரேடியோவில் வந்தது பேச்சு அல்ல, பாட்டு என்பது புரிந்தது! ஆகாஷ்வாணியில் சங்கீதஞானம் வர வர நன்றாகப் பரிமளித்து வருகிறது என்று தனக்குள் கூறிக் கொண்டாள் சித்ரா.

இந்தச் சமயத்தில்தான் வாசலில் தபால்காரனின் குரல் 'சார் போஸ்ட்' என்று கேட்டது. சித்ரா சென்று கடிதத்தை வாங்கினாள். சின்னதுரைக்கு ரவியின் தகப்பனார் சபாபதி எழுதியிருந்த கடிதம்தான் அது.

சின்ன துரைக்கு விலாசமிடப்பட்டிருந்ததால் சித்ரா, ''அப்பா!... அப்பா! உங்களுக்கு ஒரு லெட்டர்!'' என்று உரக்கக் கூவினாள்.

சின்னதுரை வந்தார். வெளியே புறப்படத் தயாராக 'டிரஸ்' செய்து கொண்டிருந்தார் அவர். ''கடிதம் யார்கிட்டேயிருந்து வந்திருக்கிறது?'' என்று கேட்டார் சின்னதுரை.

''நான் படிக்கலே. நீங்களே படிங்க'' என்று கூறிச் சித்ரா கடிதத்தைச் சின்னதுரையிடம் கொடுத்தாள்.

ரவி தன் மகன்தான் என்பதைச் சந்தேகத்துக்கிடமில்லாமல் வெட்ட வெளிச்சமாக்கிச் சபாபதி எழுதியிருந்த கடிதம் சின்னதுரையின் கைக்குப் போயிற்று.

அந்தச் சமயத்தில் டெலிபோன் மணி அடித்தது. சின்னதுரை ஒரு கையில் கடிதத்தைப் பிடித்தவாறே டெலிபோனை எடுத்து, ''ஹலோ சின்னதுரை பேசறேன்'' என்றார். மற்றொரு முனையில் பேசிய குரலைக் கேட்டதுமே சின்னதுரையின் முகம் சிறிது வெளிறிப் போயிற்று. அந்த முனையில் பேசியவர் என்ன கூறினாரோ என்னவோ, சின்னதுரை பதற்றமடைந்து, ''வேண்டாம்! வேண்டாம்! நானே இப்ப நேரே அங்கேதான் வரேன்... இல்லே... இல்லே.. நிச்சயமா வரேன். என்னை நம்பு. எல்லாத்துக்கும் ஏற்பாடு செய்யறேன். அவசரப்பட்டு எதையும் செய்துடாதே.... நான், இதோ வந்துகிட்டே இருக்கிறேன்'' என்று கூறி டெலிபோனை வைத்தார். சில நிமிஷ நேரம் வைத்த கண் வாங்காமல் டெலிபோனை பார்த்து கொண்டிருந்தார்.

சித்ராவின் குரல் அவரைத் தியானத்திலிருந்து எழுப்பியது. ''என்னப்பா அது? யாரோட இப்ப டெலிபோனிலே பேசினீங்க?''



"ஒண்ணுமில்லே... என் சிநேகிதன் ஒருத்தன்.... அவன் ஏதோ ஆபத்திலே சிக்கிக்கிட்டு இருக்கிறான். அவசரப் பட்டு ஏதாவது செய்துடப் போறானேன்னுதான், நானே நேரிலே வரதாச் சொன்னேன்." ஒரு முழுப் பொய்யை மறைக்கப் படாத பாடு பட்டுக் கொண்டிருந்தார் என்பதற்கான அறிகுறிகள் எதுவுமே அவர் முகத்தில் தெரியவில்லை.

"நல்ல வேளைப்பா! நான் நீங்கதான் ஏதோ சங்கடத்திலே மாட்டிக் கிட்டீங்கன்னு நினைச்சுட்டேன்."

"சரி! சரி! நான் போய் அவனைப் பார்க்கிறேன்" என்று கூறிப் புறப்பட்டார் சின்னதுரை.

"அப்பா.... கையிலே லெட்டர் வைச்சிருக்கிறீங்க. படிக்கவேயில்லையே" என்று நினைவுபடுத்தினாள் சித்ரா.

"என்ன லெட்டர் இது! யார் எழுதியிருக்காங்க" என்றவாறே, கடிதத்தைத் திருப்பிக் கையெழுத்தைப் பார்த்தார் சின்னதுரை. சபாபதி என்று படித்ததும் அவருக்குக் கோபம் பொங்கி வந்தது.

"மடையன்! அந்தச் சபாபதிதான் எழுதியிருக்கிறான். வெட்கங் கெட்டவன். காறித் துப்பின பிறகுகூடக் கடுதாசி போடறான்...." என்று தபால் கார்டைக் கசக்கினார்.

"என்னதான் எழுதி யிருக்கார்னு பாருங்களேன் அப்பா!"

"சீ! அவன் லெட்டரை நான் ஏன் படிக்கிறேன்?" என்று கடிதத்தை வீசி எறிந்துவிட்டு வெளியேறினார் சின்னதுரை.

ரவி, சனீசுவரன் கோயிலை தினம் சுற்றியதாலோ என்னவோ, சபாபதியின் கடிதம் இவ்வாறாகச் சின்னதுரையால் படிக்கப்படாமல் தப்பித்தது. சித்ரா அந்தக் கடிதத்தை எடுத்துச் சீர்ப் படுத்திப் படித்தாள். ஆச்சரியப்பட்டாள். மீண்டும் படித்தாள். 'ஆஹா! சந்தேகமே இல்லை. எந்தச் சபாபதியின் மகன் ரவி தன் வீட்டு வாசற்படியையே மிதிக்கக் கூடாது என்று தன் தந்தையிடம் சபதமிட்டாரோ, அதே சபாபதியின் மகன் ரவிதான் இன்று அவருக்கு உயிர் சிநேகிதன் என்று நினைத்து வியந்தாள் சித்ரா. 'இந்த ரவிக்கு என்ன துணிச்சல் இருக்க வேண்டும்? இப்போது நன்றாக என் கையில் அவர் சிக்கிக் கொண்டார். பார்க்கலாம், ஒரு கை!' என்று தீர்மானித்து, பொழுது போக ஒரு வழி கிடைத்த மகிழ்ச்சியோடு வெளியே சென்றாள் சித்ரா.

ராஜரத்தினம்வீட்டுக்கு முத்து அன்று போய்ச் சேருமுன் அவனைப் பற்றி அங்கு

ஒரு சர்ச்சை நடந்து கொண்டிருந்தது. ராஜரத்தினம் காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தார். ''கிரிஜா, நல்ல டாக்டர் வந்து சேர்ந்தார் நமக்கு! நாயைப் பார்த்தா பயந்து பயந்து ஓடரூரு. நாயைக் குணப்படுத்துன்னு நமக்குத் தூக்க மருந்து கொடுக்கிரூரு. என்னம்மா, டாக்டர் இவரு!''

''அவர் மேலே என்னப்பா தப்பு? நாமாகத்தான் அந்த மருந்தைக் குடிச்சோம். அதுலே ஒண்ணும் ஆபத் தில்லேன்னு அவர் பேசாமல் இருந் திருக்கிரூரு. பாவம்! அவரும்தானே குடிச்சாரு!'' என்று முத்துவுக்கு வக்காலத்து வாங்கினுள் கிரிஜா.

''என்னமோ! அந்த டாக்டருக்கு ஒரு எழவும் தெரியாதுன்னுதான் நான் நினைக்கிறேன். யாரோ சிபாரிசு பண்ணி னதை வெச்சு நான் நல்லா ஏமாந்து போயிட்டேன்.''

''உஸ்!'' அப்பாவை அடக்கினுள் மகள். ''ஏன் கத்தறீங்க? டாக்டரின் அஸிஸ்டென்ட் எதிராஜ் கீழேதான் இருக்கிரூரு. அவர் காதிலே விழப் போகுது!''

''விழட்டுமே! அந்த எதிராஜ் ஒருத்தரு. சதா திருட்டு முழி! வீட்டிலே பாத்திரம் கீத்திரம் எல்லாம் ஜாக்கிரதை!''

''என்னப்பா இது, இப்படியெல்லாம் பேசறீங்க?'' இந்தச் சமயத்தில் 'டாக்டர்' 'எதிராஜ்' என்ற வார்த்தைகள் எதிராஜ் காதில் இலேசாக விழுந்தன. மேலே என்ன பேசிக்கொள்





"என் தாத்தாவும் பாட்டியும் ஒரே ஊரில் பிறந்தவா! இதுமாதிரி ஒரே சமயத்தில் நடந்தது ஏதேனும் உன்னால் சொல்ல முடியுமா?"

"ஓ! எங்கப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஒரே சமயத்திலே கல்யாணம் ஆச்சுடா!"

---

கொள்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள, சத்தம் செய்யாமல் படியேறி, வந்து ராஜரத்தினமும் கிரிஜாவும் பேசிக் கொண்டிருந்த அறைக்கு வெளியே வந்து அவர்கள் கண்ணில் படாமல் நின்றான் எதிராஜ்.

அப்போது ராஜரத்தினம் பேசிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது. "இதோ பாரும்மா, கிரிஜா! இன்னும் ஒரு வாரம் அந்த டாக்டருக்கு டைம் கொடுப்போம். அதுக்குள்ளேயாவது ஏதாவது செய்து அசோக்கை அவர் குணப்படுத்தாட்டி, நாம் வேறே டாக்டரைப் பார்க்க வேண்டியதுதான்."

"சரி. அப்போ ஒரு வாரம் பேசாம இருங்க. எதையாவது சொல்லி டாக்டரைத் துரத்திடாதீங்க. பாவம் அவர் ரொம்ப நல்லவர்."

"உனக்கென்னவோ அவர் மேலே நல்ல அபிப்பிராயம் விழுந்திடிச்சு. நாயைப் பார்த்துப் பயப்படறவன் நாய்க்கு வைத்தியம் செய்ய முடியுமா?"

"அவர் ஒண்ணும் நாயைப் பார்த்துப் பயப்படலே."

"பின்னே ஏன் அப்படி ஓடினார்?"

"அசோக்கை ஓட வெச்சு எக்ஸர்ஸைஸ் கொடுக்க!"

"சரி, சரி! எனக்கென்ன? ஒரு வாரம் பேசாம இருக்கிறேன். அதுக்குள்ளே அசோக் குணமாகலேன்னா, டாக்டரும் அவர் அஸிஸ்டெண்டும் வெளியே போக வேண்டியதுதான்" என்று முடித்தார் ராஜரத்தினம்.

அவர் நாற்காலியை நகர்த்திக் கொண்டு எழுந்திருக்கும் சத்தம் கேட்டு எதிராஜ் தன் இடத்தை விட்டு நகர்ந்து கீழ் ஹாலுக்குச் சென்று விட்டான்.

அப்போதுதான் முத்து வந்துகொண்டிருப்பதைக் கவனித்த எதிராஜ் அவனை மாடிக்குப் போக விடாமல் தடுத்துத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றான்.

தோட்டத்தில் முத்துவின் சட்டைக் காலரைப் பிடித்துக்கொண்டு எதிராஜ், "ஏண்டா, என்னைக் காலை வாறி விட்டுறதுன்னு திட்டம் போட்டிருக்கியா?" என்று மிரட்டினான்.

முத்துவுக்குக் கைகளெல்லாம் வெட வெடவென்று நடுங்க ஆரம்பித்தது. ரவியிடம் தான் கலந்தாலோசித்தது எதிராஜுக்குத் தெரிந்து விட்டது என்று எண்ணி பயந்து, "வந்து.... வந்து.... நான்.... இனிமே... வந்து... யார்கிட்டேயும் நான்....!" என்று உளறினான். முத்து சொல்ல நினைத்தது, "நான் இனிமே யார்கிட்டேயும் உன்னைப் பத்திப் பேசலை. ரவிகிட்ட பேசினது தப்பு. என்னை மன்னிச்சுடு. ரவி சொன்ன மாதிரி உன் நடவடிக்கைகளை நான் கவனிச்சு அவன் கிட்ட சொல்ல மாட்டேன்" என்ற வார்த்தைகள்தான். ஆனால் பயத்தில் அவன் நாக்குப் புரண்டு விளையாடி அவனைப் பேச விடாமல் தடுத்தது. கடவுளாகப் பார்த்து முத்துவுக்குத் தந்த வரப் பிரசாதம் இது. அவன் உண்மையை அப்படியே உளறிக் கொட்ட நினைக்கும் போதெல்லாம் நாக்கு ஒத்துழைக்க மறுத்து அவனைப் பேச விடாமல் தடுத்து அவனைக் காப்பாற்றிக் கொண்டு வந்தது.

எதிராஜ் முத்துவை ஓர் உலுக்கு உலுக்கினான். "டேய்! சும்மா இருடா! மரியாதையா அந்த நாயைக் குணப்படுத்தப் பாரு. இல்லாட்டி நாமெல்லாம் வீட்டை விட்டு வெளியேற வேண்டியதுதான்" என்று தான் ஒட்டுக் கேட்ட விவரங்களை முத்துவிடம் எதிராஜ் விளக்கிச் சொன்னான்.

முத்து, "இப்போ நான் என்ன செய்யறது? எனக்கு வைத்தியத்தைப் பத்தி என்ன தெரியும்?" என்று பரிதாபமாகக் கேட்டான்.

"நீ ஒண்ணும் செய்ய வேண்டாம். நான் சொல்றபடி செய். ராஜரத்னம் என்னதான் சொன்னாலும் கிரிஜா

அதி முக்கியமான
ஒன்றைக்
காணவில்லையே:

# நெரோலாக் பெயிண்டு

ஒயிலான அந்த அலங்கார சாதனங்களுக்காக ஊரெல்லாம் துருவித் தேடினீர்களா? மணியான அக் கலைப் பொருள்களுக்காக மணிக் கணக்கில் கடைகளை அலசினீர்கள் அல்லவா? ஆனால் அதி முக்கியமான ஒன்றை மறந்தீர்களே: நெரோலாக் தயாரிப்பான தரமான பெயிண்டு. தேர்ந்தெடுக்கப் பல்வேறு வகையான கொள்ளையழகுச் சாயல்கள். உங்கள் அலங்கரிப்புக்கு நிறைவுக் களையூட்டி இல்லத்தை எழிலோவியமாக்குங்களேன். புதுமைக் களையோடு மேலும் பல்லாண்டு விளங்கச் செய்யுங்கள்.

இந்தியாவிலேயே முதன்முதலாக அக்ரிலிக் அடிப்படை கொண்ட எமல்ஷன் பெயின்டை அறிமுகப்படுத்தியவர்கள்.




**குட்லாஸ் நெரோலாக் பெயிண்டுகள்—வாங்கக் கிடைப்பவற்றுள் மிகச் சிறந்தவை**

INTER PUB/GNP/2 TAM

குட்லாஸ் நெரோலாக் பெயிண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், 29, பெரியண்ண மேஸ்திரி தெரு, சென்னை-1]

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

## வலியை அதி வேகமாக வெளியேற்ற

# புதிய மைக்ரோ:ஃபைண்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோ:பைண்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோ:பைண்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருள்களின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம்வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய நமைச்சலும் • ஃப்ளு • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி.

புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்

நிவாரணம்

எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறுகள் பெரியதாக உள்ளதோ, அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக்கவ்வளவு நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்கவேண்டியிருக்கிறது.

புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ'

நிவாரணம்

மைக்ரோ:பைண்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

புதிய மைக்ரோ:பைண்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோ:பைண்ட்

'ஆஸ்ப்ரோ'

அதி வேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது

நிகோலஸ் தயாரிப்பு

கொஞ்சம் கண்டிப்பாப் பேசினு அவர் அதை மீறமாட்டாரு. அதனுலே நீ எப்படியாவது கிரிஜாவைக் கைக்குள் போட்டுக்கிட்டா எத்தனை நாள் வேணுமின்னுலும் நாம இங்கேயே இருக்கலாம்.''

''அதுக்கு என்ன செய்யணும்?''

''நீ கிரிஜாவைக் காதலிக்கிற விஷயத்தை அவகிட்டேயே சொல்லிடு. அது போதும்.''

''அய்யய்யோ! நான் அவளைக் காதலிக்கிற விஷயத்தை அவகிட்டேயே சொல்றதா? சே! அசிங்கம்!''

''அதுலே என்னடா அசிங்கம்?''

''சே! சே! ரொம்பத் தப்பு!''

''என்ன தப்பு? அவளைக் காதலிக்கத்தானே நீ இங்கே வந்திருக்கிறேன்னு சொன்னே?''

''ஆமாம்!''

''அவளைக் காதலிக்க வந்திருக்கிறே, ஆனு அவகிட்டே அதைச் சொல்லக் கூடாதா?''

''அப்போ நீ ஒண்ணு செய்யேன்!''

''என்ன?''

''நீ நெக்லேஸ் திருடப் போறதை ராஜரத்தினம்கிட்டே சொல்லிடேன்.''

''விளையாடறியா?''

''அதுலே மட்டும் என்ன தப்பு? நெக்லேஸைத் திருடறதுக்கு வரலாம், ஆனு அதைஅவர்கிட்டேசொல்லக்கூடாதா?''

''டேய்! என்னையா கிண்டல் செய்யறே! தொலைச்சுப்புடுவேன் உன்னை. போய் மரியாதையா கிரிஜாகிட்டே நீ அவளைக் காதலிக்கிற விஷயத்தை சொல்லு.''

''நானும் அவளும் காதலிக்கிறதிலே உனக்கு என்ன அக்கறை?''

முத்து இவ்வாறு கேட்டவுடன் எதிராஜ் தன் திட்டத்தை விளக்கினுன். முத்துவும், கிரிஜாவும் காதலர்களாகி விட்டால், அதற்குப் பிறகு ராஜரத்தினம் என்னதான் சொன்னுலும் முத்துவை வீட்டை விட்டு வெளியே அனுப்ப அவள் சம்மதிக்க மாட்டாள். முத்துவோடு சேர்ந்து, எதிராஜும் வீட்டிலேயே இருந்து கொண்டு நெக்லேஸைக் கண்டு பிடித்து விடலாம்.

இவ்வாறு எதிராஜ் தன் திட்டத்தை விளக்கிய போதுதான் முத்துவுக்கு எதிராஜ் தன் காதல் மீது காட்டும் அக்கறை புரிந்தது.

''இப்போ நான் சொல்றது புரிஞ்சுதா?'' என்ருன் எதிராஜ்.

''அது சரி! கிரிஜா என்னைக் காதலிப்பான்றது என்ன நிச்சயம்?''

''இல்லாட்டி அவ அப்பாகிட்டே, உனக்காக அவள் ஏன் அவ்வளவு பரிஞ்சு பேசணும்?''




'' ஐயா, சாமி! இரண்டு கண்ணும் தெரியாதவன்! எதனுச்சும் மூக்குக் கண்ணுடி தருமம் பண்ணுங்க!''

---

''ஐயோ, பாவம்னு இருக்கலாம்.''

''கிரிஜாவே, உன்னைக் காதலிச்சாக் கூட நீ வேண்டாம்னு சொல்லிடுவே போலிருக்குதே. முட்டாள். நேரே போய்க் கிரிஜாவைப் பார்த்துக் காதலிக்க ஆரம்பி!'' என்று கட்டளையிட்டான் எதிராஜ்.

''எனக்குப் பயம்மா இருக்குது!'' என்ருன் முத்து.

''நீ போய்க் கிரிஜாகிட்டே காதல் வார்த்தை பேசாட்டி உன்னைத் தொலைச்சுப்புடுவேன்'' என்று எதிராஜ் மிரட்டினுன்.

''போறேன்! போறேன்! முதல்லே அவகிட்டே என்ன பேசணும்?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது.

''நாளைக்குப் பார்த்துக்கலாமே.... இன்னிக்கு வேண்டாமே!'' முத்து கெஞ்சினுன்.

''தள்ளிப் போடற விஷயமில்லே இது. ராஜரத்தினம் நம்மை வீட்டை விட்டு வெளியே அனுப்பாம இருக்க, இதுதான் வழி. அதையும் உடனே செய்யணும்.''

''ரொம்ப அவசரக் காதலா இருக்குதே!''

''டேய், முத்து! அதோ, கிரிஜா! தோட்டத்துக்கு வந்துகிட்டு இருக்கிரு. நேரே போய்ப் பேச்சை ஆரம்பி. உம்.... நான் இங்கேயே செடிக்குப் பின்னுலே மறைஞ்சுகிட்டுக் கேட்டுக்கிட்டிருப்பேன். ஜாக்கிரதை!'' என்று கூறி விட்டு எதிராஜ் வேகமாகச் சென்று செடிக்குப் பின்னுல் மறைந்தான்.

முத்து, கிரிஜா தன்னை நெருங்கி வருவதைப் பார்த்தான். யாராவது நாலு கம்பளிகளைக் கொண்டு வந்து தன் மீது போர்த்திவிட மாட்டார்களா என்று பரிதவித்தான். அவ்வளவு குளிர் எடுத்தது அவனுக்கு.

''என்ன டாக்டர் ஸார்! இங்கே நின்னுக்கிட்டிருக்கிறீங்க....?'' என்றாள் கிரிஜா.

''வந்து ஒண்ணுமில்லே. சும்மாத்தான்....'' என்று நகர ஆரம்பித்த முத்துவைச் செடிக்குப் பின்னாலிருந்த எதிராஜின் கை சற்றே வெளி வந்து பிடித்து நிறுத்தியது.

''ஆமாம்! டாக்டர், உங்ககிட்டே ஒரு விஷயம் கேக்கணும். தப்பா நினைக்க மாட்டீங்களே?'' என்றாள் கிரிஜா.

''என்ன விஷயம்?''

''நீங்க ஏன் அசோக்கைப் பார்த்தா பயப்படறீங்க?''

''பயம் ஒண்ணுமில்லே.... அதிருக்கட்டும்.... வந்து....''

''என்ன டாக்டர் சொல்லுங்க!''

''நானா ஒண்ணும் கேக்கலே....எதிராஜ்தான் கேக்கச் சொன்னான்.''

''என்னது? பீஸா? நாயைக்குணப்படுத்திட்டுத்தானே பீஸ் கேக்கணும்?''

''அதில்லே.... அதாவது.... நான் சொல்ல வந்தது வேறே விஷயம். சரி, அதை அப்புறம் சொல்றேன்!'' செடிக்குப் பின்னாலிருந்து முத்துவின் காலில் ஒரு குத்து விழுந்தது. ''இப்பவே சொல்றேன். இப்பவே சொல்றேன்'' என்று குதித்தான் முத்து வலி தாங்காமல்.

''என்ன டாக்டர் என்ன, ஏதாவது கடிச்சுட்டுதா?''

''எதிராஜ் கடிச்சிருச்சு!... அதாவது.... ஒண்ணுமில்லே!''

''நீங்க ரொம்ப தமாஷா பேசறீங்க.... சரி, என்னமோ ஆரம்பிச்சிங்களே, சொல்லுங்க.''

''நாம இப்ப தனியா தோட்டத்திலே இருக்கிறோம். சினிமாவா இருந்தா அந்த விஷயத்தை இப்பதான் சொல்லுவாங்க.....''

''என்ன சொல்றீங்க நீங்க?''

''இருங்க வரேன்... சரி வேண்டாம். நான் அப்புறமே சொல்றேன். இப்ப என்னாலே முடியலே.''

''சரி!'' என்று கூறி கிரிஜா நகர்வதைப் பார்த்த எதிராஜ், ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று குரலைச் சற்று மாற்றிச் செடிக்குப் பின்னிருந்தே உரக்கக் கூறினான். முத்து அதை நிச்சயம் சொல்ல மாட்டான், தானேதான் கூற வேண்டும் என்று தீர்மானித்து, கிரிஜா முத்துவை கவனிக்காததால் அவன் கூறியதாகவே அவள் நினைத்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையில்தான் எதிராஜ் அவ்வாறு செய்தான். அவன் நம்பிக்கை வீண் போகவில்லை.

''நான் காதலிக்கிறேன்'' என்ற வார்த்தைகள் கிரிஜாவைப் பிரேக் போட்டு நிறுத்தின. கிரிஜா முத்துவைப் பார்த்துத் திரும்பினாள்.

எதிராஜ் இப்படி மோசம் செய்வான் என்று முத்து நினைக்கவே இல்லை. தான் அவ்வாறு கூறியதாக அல்லவா கிரிஜா நினைத்திருப்பாள்!... 'ஐயோ! இப்படி மாட்டிக் கொண்டோமே' என்று தவித்துப் போய்விட்டான். கிரிஜா அடி மேல் அடி வைத்து அவனை நெருங்கி வந்தாள்.

''டாக்டர், நீங்கதானே இப்ப அந்த மாதிரி சொன்னீங்க?'' என்று கேட்டாள் கிரிஜா.

''இல்லே, இல்லவே இல்லே. இந்தச் செடிக்குப் பின்னால் ஒளிந்துகொண்டிருக்கும் எதிராஜ்தான் அவ்வாறு சொல்லி விட்டான். நான் சொல்வதை நம்புங்கள். நான் சொல்வது உண்மை. ஆமாம், உண்மை'' என்று சொல்லிவிட முத்து வாயைத் திறந்தான். அவனுக்குக் கடவுள் அளித்த வரப் பிரசாதமான பழக்கம் மீண்டும் அவனைக் காப்பாற்றியது. அவன் நாக்குப் புரண்டது.... ''வந்து.... ஆ... — ஆமாம் உண்மை!'' என்ற வார்த்தைகளே வெளிவந்தன. என்ன சொல்லிவிட்டோம் என்று அவன் தத்தளித்துக் கொண்டிருக்கும் போதே கிரிஜா, ''நிஜமாகவா! டாக்டர்! நான் ரொம்ப அதிர்ஷ்டக்காரி!'' என்றாள்.

எதிராஜ் மனம் மகிழ்ந்து செடிக்குப் பின்னாலிருந்த முத்துவின் காலில் குத்திய இடத்தைத் தடவிக் கொடுத்தான். முத்துவுக்கு மெய்சிலிர்த்தது. கிசுகிசு மூட்டியது போல் இருக்கவே, 'ஹிஹி' என்று பல்லை இளித்தான்.

தன்னைப் பார்த்து அவன் சிரிப்பதாக நினைத்த கிரிஜா பதிலுக்குக் 'கிக் கிக்' என்று அதிர்வேட்டுச் சிரிப்புச் சிரித்தாள்.

''டாக்டர், நானும் உங்ககிட்டே எப்படிச் சொல்றதுன்னு தெரியாம தயங்கித்தான் பேசாதிருந்தேன். எனக்குச் சம்மதம்தான்!' என்றாள் கிரிஜா.

முத்து ஒரேயடியாகப் பிரமித்துப் போய் நின்றான். எதிரே ராஜரத்தினம் வந்து கொண்டிருப்பதைக்கூட அவன் கவனிக்கவில்லை.

(தொடரும்)

G.E.C.

வழங்கும்

# ஒரு புதிய நாதம்!

மேனோன்னதமான 6 வால்வு ரேடியோ
செட்டுகளை நிர்மாணித்துப் புகழ் பெற்ற
இஸி—ஏற்கனவே BC 5151,
: 5356—ஆகிய செட்டுகளை
ழங்கியவர்கள்—இப்பொழுது
: 5358 புதிய செட்டைத்
பாரித்து உங்களுக்கு
ழங்குகின்றனர். இந்த
நஷ்டியில் ஜிஇஸி "நாத
ானம்" என்ற பிரத்யேக
ம்சம் ஒன்றைப்புகுத்தி
லா ஜிஇஸி தயாரிப்பு
நக்கும் இது உயர்ந்ததாகச்
ய்துள்ளனர்!



"நாத விதானம்" இந்த ஜிஇஸி ரேடியோவில் கிடைப்பதற்குக் காரணம் இப்புதிய செட்டில் ஒவ்வொரு உறுப்பும் கவனத்துடன் தெரிந்தெடுக்கப்படுகின்றன. உட்புற மின்விசை சர்க்யூட் அமைப்பு, எத்தனை ஆண்டுகளானாலும் தொனி ஒரே விதானத்துடன் தெளிவாக இருக்கும்படி ரேடியோ என்ஜினியர்களால் உருவாக்கப்படுகின்றன.

இந்த 6 வால்வு 3 அலைவரிசை ஏஸி ரேடியோ செட்டில் ஒரு நுட்பமான 15செ.மீ×10செ.மீ எலிப்டிகல் ஒலிபெருக்கிசாதனமும் தொடர்ச்சியான தொனிக் கட்டுப்பாட்டு விசையும் அமைந்துள்ளன. வசீகரமான வெனிர் நிற மரக் கேபினட், எலக்ட்ரானிக் டியூனிங் இண்டிகேட்டரும் (மாயக்கண்) உண்டு. ஒலியை ஓங்கச் செய்யவும் வெளியே தனிப்பட்ட ஒலிபெருக்கி அமைக்கவும் இணைப்பு வசதிகளுண்டு. விலை ரு. 375/- (எக்ஸைஸ் தீர்வை உள்பட்ட விலை. உள்ளூர் வரிகள் தனி).

G.E.C.

ல ஒலி கேட்கும் உங்கள் உலகம்

ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி
ஃ இந்தியா பிரைவேட் லிமிடெட்

TRADE MARK G.E.C.—PERMITTED USER:
NERAL ELECTRIC COMPANY OF INDIA PRIVATE LIMITED

# கல்லுக்குள் ஈரம்

## ர. சு. நல்லபெருமாள்

வெள்ளி விழா இரண்டாவது பரிசு நாவல்

### அத்தியாயம் 30

## சாது மிரண்டால்

இரண்டு நாட்களுக்குப் பிறகு வெளியான சுயேச்சைப் பத்திரிகையில் வெங்குவின் படம் பெரிய அளவில் அச்சாகியிருந்தது. பத்திரிகையைக் கையில் வைத்துக் கொண்டு கண் கலங்கப் படத்தைப் பார்த்தான் சிவானந்தம். பக்கத்தில் கமலவாசகி சோகமே உருவாய் அமர்ந்திருந்தாள். வெங்குவின் படத்தைப் பார்க்கப் பார்க்கச் சிவானந்தத்துக்கு வெங்குவின் மீது மரியாதையே தோன்றியது. அவனுடைய மன அளவில் வெங்கு மிக மிக உயர்ந்து விட்டான். எல்லார் கண்களிலும் பித்துக்குளி மாதிரி திரிந்து கொண்டு எவ்வளவு பெரிய காரியத்தில் இறங்கி விட்டான்! விளையாட்டு மாதிரியல்லவா தன் உயிரைக் கொடுத்து விட்டான். இவ்வளவு உணர்ச்சியும், தியாகமும் அந்த உருவத்துக்குள் எப்படி அடங்கிக் கிடந்தன. தண்ணீருக்குள் ஆழம் தெரியாத மாதிரியல்லவா வெங்குவின் தன்மை வெளியே தெரியாமல் இருந்திருக்கிறது!



தன்க்காகவே வாழத் துடிக்கும் இந்த உலகத்தில் இந்த வெங்கு இப்படிப் பிறருக்காகத் தன் உயிரைப் போக்கிக் கொண்டானே! இது கூடப் பித்துக்குளித்தனம் தானா? சுயநலம் தலைவிரித்தாடும் கூட்டத்துக்கு இந்தச் செயல் பித்துக்குளித்தனமாகத் தான் தோன்றும்.

சிவானந்தம் படத்தைக் கூர்ந்து பார்த்தான். பார்க்கப் பார்க்க அவன் மனத்தில் வெங்குவின் தியாகம் பற்றிய நினைவுகள் நிலைகொள்ளாமல் பொங்கின. உடல் சிலிர்த்தது. எத்தனையோ மகான்கள் பார்ப்பதற்குப் பித்துக்குளி மாதிரிதானே இருந்திருக்கிறார்கள். இன்று இந்தப் பித்துக்குளி மகானாகி விட்டான்!...

''வெங்குவின் ஆசை, கடைசியில் நிறைவேறிவிட்டது. பத்திரிகையில் படம் வர வேண்டும் என்றான். இன்று எவ்வளவு புகழோடு அவன் படம் பிரசுரமாகியிருக்கிறது!'' என்று மனத்துயரிலும் வியந்து கூறினான் சிவானந்தம்.

கமலவாசன் பத்திரிகையை வாங்கிப் பார்த்தான். படத்தைப் பார்த்ததும் அவனால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. உதடுகள் துடித்தன. கட்டு மீறிக் கொண்டு கண்ணீர் பெருகிப் பத்திரிகையில் விழுந்து தெறித்தது.

"இதற்குப் பழி வாங்க வேண்டும்" என்றான் கண்ணீர் சிந்திக்கொண்டே.

"யாரையோ?" — சிவானந்தம் சற்று எரிச்சலுடன் கேட்டான்.

"இந்தக் காங்கிரஸ்காரர்களைத்தான்.. இவர்களுடைய ஆர்ப்பாட்டத்தினால்தானே இம்மாதிரி நடந்தது?" என்றான் கோபத்துடன்.

"வேங்கு இறந்த பிறகுகூட நீ இருந்தவில்லையே! பழி வாங்கத்தானே துடிக்கிறாய்? பைத்தியக்காரன் மாதிரி இருந்து கொண்டு எவ்வளவு பெரிய தியாகம் செய்து விட்டான்! அவனைப் புகழும் உலகம் உன்னைப் புகழுமா?"

"என்னை யாரும் புகழ வேண்டியதில்லை!" என்றான் வெடுக்கென்று. சிவானந்தம் அவனை உற்றுப் பார்த்தான்.

"போலீஸ் அதிகாரியின் மனைவி என்று தெரிந்தும், போலீஸின் துப்பாக்கிக் குண்டினால் தன் அத்தை இறந்து விட்டாள் என்று தெரிந்த பிறகும், திரிவேணி, உன்னைக் கூட்டத்திலிருந்து காப்பாற்றிப் பத்திரமாக லாரியில் ஏற்றி அனுப்பி வைத்தாளே! அவள் மட்டும் பழி வாங்க நினைத்திருந்தால், ஒரு விநாடி அவள் தாமதித்திருந்தால்கூடப் போதுமே; அவள் வீட்டுக்கு முன்னால் நின்ற கூட்டம் உன்னைக் கால் வேறு கை வேறாகப் பிய்த்தெறிந்திருக்கும். அவளும் பெண்தான். நீயும் பெண்தான்" என்றான் சிவானந்தம் அலட்சியமாக.

அப்போது போலீஸ் இன்ஸ்பெக்டர் அவசரமாக உள்ளே வந்தார்.

"இன்று மாலை ஆற்று மணலில் திரிவேணி பேசப் போகிறாளாம்" என்று பதறிக் கொண்டே சொன்னார் இன்ஸ்பெக்டர்.

"பேசட்டுமே?" என்றான் சிவானந்தம்.

"தடை உத்தரவு இருக்கிறதே!" என்று பரபரப்புடன் கூறினார் இன்ஸ்பெக்டர்.

"இருந்தால் என்ன? மக்களின் மனக் கொந்தளிப்புக்குப் போக்கிடம் கொடுத்துத்தானாக வேண்டும். மக்கள் நமக்கு விரோதிகளல்ல. அவர்களுடைய பாதுகாப்புக்காகத்தான் நாம் இருக்கிறோம். இதை நீர் உணர்ந்து கொண்டீரா?" என்று கேட்டான் சிவானந்தம்.



இதைக் கேட்டு இன்ஸ்பெக்டர் அதிர்ந்து போனார். இரண்டு நாட்களுக்கு முன் துப்பாக்கிப் பிரயோகத்துக்கு அவர் உத்தர விட்டதைச் சிவானந்தம் குத்திக் காட்டுகிறான் என்பதை உணர்ந்து கொண்டார்.

''பேசத்தானே போகிறான், பேசிவிட்டுப் போகட்டும். அதைத் தடுக்க வேண்டாம். வேறு ஏதாவது கலவரம் நடவாமல் மட்டும் பார்த்துக் கொண்டால் போதும்'' என்றான் சிவானந்தம் அமைதியாக.

''அவனைப் பேச விடுவானேன்? இதற்கெல்லாம் இடம் கொடுத்தால்....'' என்று கமலவாசகி குறுக்கிட்டுப் பேசினாள். ஆனால் அவள் பேசி முடிப்பதற்குள் சிவானந்தம், அவள் பக்கம் திரும்பி, அவளை எரித்து விடுபவனைப் போல் முறைத்துப் பார்த்தான். அச்சுறுத்தும் அவனுடைய கண்களையும், கோபத்தினால் பயங்கரமாக மாறிய முகத்தையும் பார்த்த கமலவாசகி, நடுநடுங்கி விட்டாள். பேச வந்ததை மேலும் பேச இயலாமல் திகிலடைந்து போய்ச் சிவானந்தத்தை வெறிக்கப் பார்த்தாள். பிறகு சிவானந்தம், இன்ஸ்பெக்டரிடம் திரும்பி, ''நீங்கள் போகலாம். ஆற்று மணல் கூட்டத்தில் புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளுங்கள்'' என்றான். ஒரு ஸல்யூட் அடித்து விட்டு இன்ஸ்பெக்டர் அந்த அறையை விட்டு மறைந்து சென்றார். அவர் மறைந்ததும் சிவானந்தம் கோபத்துடன், கமலவாசகியைப் பார்த்துத் திரும்பினான்.

''இதிலெல்லாம் நீ ஏன் தலையிடுகிறாய்?'' என்று கேட்டான்.

''எல்லாம் உங்களுடைய நன்மைக்காகத் தான். உங்கள் உத்தியோக உயர்வுக்காகத் தான்'' என்றாள் கமலவாசகி.

''நீ இப்படி இருந்தால் என் உத்தியோகத்தையே ராஜினாமாச் செய்து விடுவேன்'' என்று இரைந்தான்.

''நீங்கள் இப்படிக் கோழையாக இருந்து கொண்டு போலீஸ் உத்தியோகம் வகிப்பதை விட ராஜினாமாச் செய்து விடுவது மேல் தான்.''

கமலவாசகியின் சூடான பதில் சிவானந்தத்தைத் தாக்கியது.

''என்னுடைய உத்தியோக சம்பந்தமான விஷயத்தில் நீ தலையிட வேண்டியதே இல்லை'' என்றான் சிவானந்தம் கண்டிப்புடன்.

''ஏன், அதனால் இப்போது என்ன குறைந்து விட்டதாம்?'' என்று அலட்சியமாகக் கேட்டாள், கமலவாசகி.

சிவானந்தம் சலிப்போடு அவளுடன் மேலும் பேசப் பிடிக்காமல் அந்த அறையை விட்டு வெளியேறினான்.

இரவு ஏழு மணிக்குத் தாமிரபரணி ஆற்றுக் கரையில் ஜன சமுத்திரம் அலை மோதிக் கொண்டிருந்தது. கலோசன முதலியார் பாலத்தின்மீதும் மக்கள் நிரம்பியிருந்ததால் போக்குவரத்து கூடத் தடைப்பட்டு விட்டது. வானத்தில் மேகம் சூழ்ந்திருந்ததால் அன்று சீக்கிரமாகவே இருட்டி விட்டது. ஒன்றிரண்டு மழைத் துளிகள்கூட விழுந்தன. திரிவேணி பேசுவதைக் கேட்க ரங்கமணியும் வந்திருந்தான். பாலத்துக்குக் கீழே ஒரு மண் மேட்டின் மீது இருளில் மறைந்தவாறு உட்கார்ந்திருந்தான்.

இரண்டு நாட்களாகவே அவன் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டிருந்தான். இரத்தவெறி அவனுள் பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்தது. பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்ற துடிப்பில் அமைதியிழந்து திரிந்து கொண்டிருந்தான். நடந்துவிட்ட சம்பவத்துக்கு எதிர் நடவடிக்கை எடுப்பது பற்றி இன்னும் இரண்டு நாட்களில் இரகசியமாகக் கூடிப் பேசுவதாகச் சர்தார் முடிவு செய்திருந்தார். அந்த நினைவிலேயே கலோசன முதலியார் பாலத்துக்குக் கீழே உட்கார்ந்திருந்தான் ரங்கமணி.

சற்றுத் தள்ளி மணலில் மக்களின் கூட்டம் நெருக்கி அடித்துக் கொண்டு அமர்ந்திருந்தது. அப்பால் மேடையில் பல தலைவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். பெட்ரோமாக்ஸ் விளக்கொளியில் திரிவேணியின் முகம் நன்கு தெரிந்தது. மேடையில் தீட்சிதர் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். கூட்டம் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தது. ரங்கமணி கவனமாகத் தீட்சிதர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான். திடீரென்று அவன் முகத்தில் டார்ச் விளக்கின் ஒளி பாயவே திடுக்கிட்டான். டார்ச்சின் ஒளியில் கண்கள் கூசின. கண்களைச் சுருக்கிக் கொண்டு முகத்தைச் சுளித்தான்.

''ஓ.... மிஸ்டர் ரங்கமணியா?'' என்று உற்சாகத்துடன் மெதுவாகக் கூறிக்கொண்டு விளக்கை அணைத்துவிட்டு அவன் பக்கத்தில் வந்தான் சிவானந்தம். ரங்கமணியின் பக்கத்தில் மண்மேட்டின் மீது உட்கார்ந்து கொண்டான். சிவானந்தத்தைக் கண்டதும் ரங்கமணிக்கு எரிச்சலாயிருந்தது. அத்தையின் மரணத்துக்கு அவன்தான் காரணம் என்ற நினைவினால் அவன்மீது கோபம் தோன்றியது. கொஞ்ச நேரம் இருவருமே பேசவில்லை. சிவானந்தம்தான் பேசத் தொடங்கினான்.

''மிஸ்டர் ரங்கமணி! உங்களுக்கு என் மீது கோபம் இருக்கும். அது நியாயந்தான்'' என்றான்.

''எனக்கென்ன கோபம்? மேலும் எங்களுடைய கோபமெல்லாம் உங்களை என்ன செய்து விடும்?''

''எதிர்பாராதது நடந்துவிட்டது. இப்படி ஏதாவது நடந்துவிடுமோ என்ற பயத்தினால் தான் முன்கூட்டியே சர்தாரிடம் இதுபற்றி எச்சரித்தேன்.''

''இந்த மாதிரியான சத்தியாக்கிரகமும், ஊர்வலமும் எனக்குப் பிடிக்காது. இருந்தாலும் போலீஸ் இப்படி மிருகங்களாக நடந்து கொண்டிருக்க வேண்டியதில்லை'' என்றான் ரங்கமணி வருத்தத்துடன்.

''போலீஸைத் தூற்றி என்ன பயன்? அவர்கள் கட்டளையை நிறைவேற்ற வேண்டியவர்கள். குண்டுக்கு நல்லவர்கள் கெட்டவர்கள் என்று வித்தியாசம் தெரியுமா? மிஸ்டர் ரங்கமணி, நடந்த சம்பவம் என்னையும் அதிர வைத்து விட்டது. சர்தாரின் குடும்பத்துக்கு அளவுகடந்த துக்கம் நேர்ந்து விட்டது. இது பற்றிச் சர்தாரிடம் விசாரிக்கக் கூட எனக்குத் தைரியமில்லை. அவரைச் சந்திக்கக்கூட எனக்கு மனத்தில் தைரியம்




கண்ணைப் பறிக்கும் வெண்மை! கச்சிதமான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல்...அதன் எல்லை கடந்த வல்லமை! ஏராளமான நுரை, சலவையே வெகு எளிது. சிறுவர் ஆடை, சட்டை, சேலை....எதற்கும் நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே சலவை செய்திடவே கைகண்ட துணை ஸர்ப்.

**ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்ப

லின்டாஸ்-

இல்லே'' என்றான் சிவானந்தம் வருத்தத்துடன். பிறகு சொன்னான்:

''இரண்டு நாட்களாகப் பித்துப் பிடித்தது போல் இருக்கிறது, மிஸ்டர் ரங்கமணி! தயவு செய்து சர்தாரிடம் என்னுடைய வருத்தத்தையும், மன்னிப்பையும் தெரிவியுங்கள்..... ஏதோ நடக்கக் கூடாதது நடந்து விட்டது.''

சிவானந்தம் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அப்போது திரிவேணி பேசுவதற்காக மேடை மீது நின்றாள். கூட்டத்தில் அமைதி நிலவியது.

''எனக்கென்னவோ பயமா யிருக்கிறது'' என்றான் சிவானந்தம்.

''ஏன்?'' என்று ரங்கமணி கேட்டான்.

''உணர்ச்சிவசப்பட்டுத் திரிவேணி இந்தக் கூட்டத்தில் ஏதாவது பேசி விடுவாளோ என்றுதான். இவள் பேசி விட்டால் இந்த ஊரே கொந்தளித்து விடும்.''

''கொந்தளித்தால் என்ன? உங்களிடம் தான் துப்பாக்கி இருக்கிறதே!'' என்றான் ரங்கமணி. அவன் குரலில் ஒலித்த ஏளனத்தை உணர்ந்தான் சிவானந்தம்.

திரிவேணி பேச ஆரம்பித்ததும் மக்கள் கவனமாகக் கேட்கத் தொடங்கினார்கள். அவள் பேச ஆரம்பித்தபோது உணர்ச்சி வசத்தால் ஒருசில விநாடிகள் அவளால் பேச முடியவில்லே. 'மைக்'குக்கு முன்னால் பேசாமல் நின்றாள். கூட்டத்தையே வெறிக்கப் பார்த்தாள். அந்தக் கணத்தில் நிலவிய அமைதியின் அழுத்தம் எல்லாருடைய மனத்திலும் பெரும் பாறையாக அழுத்தியது. முதலில் தட்டுத் தடங்கலுடன்தான், திரிவேணியின் வாயிலிருந்து வார்த்தைகள் கிளம்பின. நேரம் ஆக ஆகப் பேச்சில் சூடு பிடித்து விட்டது. சாதாரண நாளாயிருந்தால், அவளுடைய ஒவ்வொரு சொல்லுக்கும் கைதட்டலும் ஆரவாரமும் கிளம்பியிருக்கும். ஆனால் அன்று எவ்வித ஆரவாரமும் இல்லே. ஊசி போட்டால்கூடச் சத்தம் கேட்கும் அளவுக்கு நிசப்தம் குடிகொண்டிருந்தது. அவளுடைய சொற்கள் கூட்டத்தாரின் இதயங்களில் பாய்ந்து கொண்டிருந்தன. தாமிரபரணி நதியே அவளுடைய பேச்சில் உணர்ச்சி வசப்பட்டுக் கிடந்தது போல் இருந்தது.

திரிவேணியின் பேச்சில் அனல் வீசியது. நிதானம் இழக்காத திரிவேணி அன்று வெறி கொண்டு விட்டாள். தான் என்ன பேசுகிறோம் என்ற உணர்வே அவளுக்கு இல்லே. கடைசியில் அவள் சொன்னாள்:

''......நடுத் தெருவிலே பட்டப் பகலிலே கட்டுக் கொன்று விட்டார்களே. தெருவில் ஊர்வலமாகப் போகக் கூடவா நமக்கு உரிமையில்லாமல் போய்விட்டது? இதைக் கேட்க நாதியில்லேயா? இந்த நெல்லே மாநகரம் ஒரு வீரனைக்கூடவா பெற வில்லே? அத்தனே பேருமே பேடிகளா? இதற்குப் பழி வாங்க இந்த ஊரில் ஓர் ஆண் மகன்கூட இல்லேயா? இல்லேயென்றால் சொல்லுங்கள், இறந்தவளுடைய புடவைகளைத் தருகிறேன், கட்டிக் கொண்டு திரியுங்கள்.....!''

திரிவேணி உணர்ச்சி வசத்தால் மேலே பேச முடியாமல் அப்படியே மயங்கிச் சரிந்து விழுந்தாள். பக்கத்தில் நின்ற தீட்சிதர் பாய்ந்து சென்று அவளைத் தாங்கிக் கொண்டார். கூட்டம் பிரமித்துப் போய்விட்டது. மேடையின் மீதிருந்த மற்றத் தலைவர்கள் திரிவேணியின் மயக்கத்தைத் தெளிவிப்பதில் பரபரப்புடன் ஈடுபட்டார்கள். கூட்டத்தில் திடீரென்று சலசலப்பு ஏற்பட்டது. தீட்சிதர் எழுந்து சென்று கூட்டத்தை அமைதியுடன் கலேந்து செல்லும்படியும் திரிவேணிக்குஆபத்து ஒன்றுமில்லே என்றும் கூறினார். கூட்டம் கலேயத் தொடங்கியது. கூட்டத்திலிருந்த சில போக்கிரிகள் சுலோசன முதலியார் பாலத்தின் மீது மின்மினி மாதிரி மின்னி அழுது வடிந்து கொண்டிருந்த நகரசபை விளக்குகளை நொறுக்கினார்கள். பாலம் முழுவதும் இருளில் மூழ்கிவிட்டது. நல்ல வேளே, அதோடு திருப்தி அடைந்துவிட்டார்கள், அந்தப் போக்கிரிகள்.

சிவானந்தம் பதறினான். கூட்டம் வெறி கொண்டு மேலும் ஏதாவது செய்து விடுமோ என்று பயந்தான். ''நான் நினைத்தபடி நடந்து விட்டது. திரிவேணி நிதானம் இழந்துவிட்டாள். அதன் முடிவு என்ன ஆகுமோ! சாது மிரண்டால் காடு கொள்ளுமா?'' என்று முனகினான். ரங்கமணிகூடத் திரிவேணியின் பேச்சைக் கேட்டு அதிர்ந்து விட்டான்.

அஹிம்சையைத் தெய்வமாக வணங்கும் திரிவேணியின் வாயிலிருந்தா இந்தச் சொற்கள் உதிர்ந்தன...?

அவனுலேயே நம்ப முடியவில்லே. திரிவேணி பேசியதை நினைவில் கொண்டு வந்து தனக்குள்ளேயே ரசித்துக் கொண்டிருந்தான்.

ஆகா! அஹிம்சையைத் திரிவேணியே சமாதி கட்டிவிட்டாள். இனி என்ன, திருநெல்வேலியையே நடுங்க வைத்து விடுகிறேன். பழிக்குப் பழி வாங்கி விடுகிறேன்.

ரங்கமணியின் உள்ளம் படபடத்தது.

**ம**றுநாள் காலேயில் ரங்கமணி திரிவேணியின் வீட்டுக்கு வந்தபோது உள்ளே திரிவேணியும் தீக்ஷிதரும் பேசிக் கொண்டிருந்தார்கள். ரங்கமணி வாசலில் சற்று நேரம் நின்றான். உள்ளிருந்து பேச்சுக் குரல்கேட்டது.

''என்னே மன்னித்து விடுங்கள், தீக்ஷிதர்வாள்! உணர்ச்சிவசப்பட்டு விட்டேன்.... என்ன பேசினேன் என்று எனக்கே தெரியாது...... அப்படியா பேசி விட்டேன்....? சேச்சே.... எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டேன். நீங்களாவது என்னைத் தடுத்திருக்கக் கூடாதா?'' — மிகுந்த துக்கத்துடன் கூறினாள். குரல் கம்மியது.

''நீ பேசியதைக் கேட்டுத்தான் நான் பிரமித்துப் போய்க் கல்லாய் உட்கார்ந்து விட்டேனே. என் பிரமிப்பு மறைவதற்குள் நீ மயங்கி விழுந்து விட்டாய்....'' என்றார் தீக்ஷிதர்.

''அத்தை போனபிறகு என் புத்தியே சரியில்லே'' என்றாள். அவள் கண்களில் நீர் நிறைந்தது. கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள் அவள்.

''நீ எழுதிய அறிக்கையைக் கொடு. சீக்கிரம் அச்சடித்து வாங்கி வருகிறேன். மக்கள் பலாத்காரத்தில் இறங்குவதற்குள் உன் அறிக்கை வெளியாகிவிட வேண்டும்'' என்றார் தீக்ஷிதர்.

ரங்கமணி உள்ளே நுழைந்தான். அவனைக் கண்டதும் இருவரும் பேச்சை நிறுத்திவிட்டார்கள். திரிவேணி எழுதி வைத்திருந்த அறிக்கையைத் தீக்ஷிதரிடம் கொடுத்தாள். அதை எடுத்துக் கொண்டு வெளியே சென்றார் தீக்ஷிதர். அவர் சென்றதும் ரங்கமணி சொன்னான்.

''நேற்றுத்தான் நீ இயற்கை சுபாவத்தோடு பேசினாய்.''

''நீங்களும் நேற்றுக் கூட்டத்துக்கு வந்திருந்தீர்களா?'' என்று பரபரப்புடன் கேட்டாள் திரிவேணி.

''வந்தேன், உன்னுடைய கட்டளையையும் ஏற்றுக் கொண்டேன்.''

''என்ன?'' என்று பதறினாள் திரிவேணி.

''பழிவாங்குகிறேன் திரிவேணி... அத்தையின் ஆன்மா அப்போது சாந்தியடையும்.''

''ஐயோ, நீங்கள் அவசரப்பட்டு எதையாவது செய்து விடாதீர்கள். நான் நேற்று பேசியதை மறந்து விடுங்கள்'' என்று கெஞ்சினாள்.

''திரிவேணி! நீ எவ்வளவுதான் அஹிம்ஸா வேஷம் போட்டாலும் உன்னுடைய உண்மையான உள்ளம் நேற்று வேஷத்தைக் கலைத்து விட்டது..... அஹிம்ஸை மனித இயல்புக்குப் புறம்பானதுதான், திரிவேணி'' என்றான் ரங்கமணி.

''எத்தனையோ விஷயங்கள் மனித இயல்புக்கு ஏற்றதாயிருக்கின்றன என்பதற்காக அவற்றைச் செய்துவிட முடியுமா? அறிவை இழந்து விடக் கூடாது. நேற்று அதைத்தான் நான் இழந்து உளறிவிட்டேன்'' என்றாள் பரிதாபமாக.

''தீக்ஷிதரிடம் என்ன கொடுத்து அனுப்பினாய்?''

''ஓர் அறிக்கை. மக்களை அமைதியாக இருக்கும்படி வேண்டி ஓர் அறிக்கை விட்டிருக்கிறேன்.''

''ஹூம்.... வேதாளம் மீண்டும் மரத்தில் ஏறிக் கொண்டதா.....? நேற்றுத்தான் நீ அறிவோடு பேசியிருக்கிறாய். திரிவேணி நேற்றுத்தான் என் மனமும் குளிர்ந்தது. நெல்லை மாநகரம் ஒரு வீரனைக்கூடவா பெறவில்லை என்று நீ அவ்வளவு பெரிய கூட்டத்தில் கேட்ட போது இதோ நான் இருக்கிறேன் என்று கத்தவேண்டும் போலிருந்தது. பக்கத்தில் சிவானந்தம் நின்று கொண்டிருந்தான்.''

''நான் பேசியதைத் தயவுசெய்து மறந்து விடுங்கள். நிதானம் இழந்துவிட்டேன்!'' கெஞ்சினாள் திரிவேணி.

''உன்னுடைய இயற்கை வேகம் நேற்றுத்தான் வெளிப்பட்டது. இதை ஏன் வீணாக நெஞ்சில் புதைத்து மறைக்கிறாய்?''

''நான் பெரிய தவறு செய்து விட்டேன். பேசக் கூடாததைப் பேசி விட்டேன். என்னவோ சைத்தான்தான் என்னுள் புகுந்திருக்க வேண்டும். மகாத்மாவுக்கு இது தெரிந்தால் என்னைப் பற்றி எவ்வளவு இழிவாக நினைத்திருப்பார்.....''

அவள் கண்களில் நீர் நிறைந்து பார்வையை மறைத்தது.

ரங்கமணி சிரித்தான்.

''உன்னைப் போன்ற வீராங்கனைகளையெல்லாம் காந்தியடிகள் தம் அஹிம்ஸா போதனையால் எப்படிக் கோழையாக்கி விட்டார். அநீதி கண்டு பொங்க வேண்டும் திரிவேணி! பொங்க வேண்டும். இப்படிக் கண் கலங்கித் தத்துவம் பேச இதுவா நேரம்?''

''பொறுமைக்குச் சக்தி உண்டு'' என்றாள் கண்களைத் துடைத்துக் கொண்டே.

''நீ இப்படியே கிளிப்பிள்ளை மாதிரி வார்தா போதனைகளை ஒப்பித்துக் கொண்டிரு..... ஆனால் நேற்று நீ திருநெல்வேலிக்குச் சவால் விட்டுவிட்டாய். அதை நான் நிறைவேற்றித்தான் தீருவேன். அத்தையை நீ மறந்து விட்டாலும் நான் அவளுக்குச் செய்ய வேண்டிய கடமை இருக்கிறது'' என்றான் ரங்கமணி உணர்ச்சிவேகத்துடன்.

திரிவேணி அவனைப் பயத்துடன் பார்த்தாள்.

'' தயவுசெய்து அமைதியாக இருங்கள். எனக்காகவாவது பொறுமையாயிருங்கள். நடந்தது நடந்துவிட்டது. பழி வாங்குவது என்று ஆரம்பித்து விட்டால் பிறகு அதற்கு முடிவே இராது.''

அவள் குரல் நடுங்கியது.

இந்தச் சமயத்தில் சோமு அங்கு வந்து கூப்பிடவே ரங்கமணி வெளியே போய்விட்டான். திரிவேணி மனம் பதறினாள். தன்னையே நொந்து கொண்டாள். எதிரே இருந்த மகாத்மா காந்தியின் படத்தைக் கூர்ந்து பார்த்தாள்.

தன்னையும் அறியாமல் கரம் கூப்பி அவரை வணங்கினாள்.

''என்னை மன்னித்து விடுங்கள். என்னை மீறிய உணர்ச்சி வேகத்தில் வாய்தவறிவிட்டேன்'' என்று முனகினாள். காந்தியடிகளோ புன்சிரிப்புடன் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தார். திரிவேணியின் மனமோ இனம் புரியாத பயத்தால் குழம்பிக் கொண்டிருந்தது. ரங்கமணியும் பாரதமாதா சங்கத்தில் உள்ள மற்றவர்களும் ஏதாவது சதி செய்வார்களோ என்ற பயத்தால் மன அமைதி இழந்து தவித்தாள். சர்தாருடைய பிடிவாதமும், தீவிரமும் அவளுக்கு நன்கு தெரியும். அவருடைய தலைமையில் அந்தச் சங்கம் அத்தையின் மரணத்துக்குப் பழி வாங்கப் புறப்பட்டு விடுமோ என்ற பீதியினால் அவள் மனம் நடுங்கியது. வேறு எதையும் சிந்திக்கச் சக்தியற்றுக் கட்டிலில் அயர்ந்து கிடந்தாள்.

ஃ ஃ ஃ

சீரபேச்சை அச்சகத்தில் அன்று இரவு நடு ஜாமத்துக்குப் பிறகு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையின் அறையில் பாரதமாதா சங்கத்தைச் சேர்ந்த அனைவரும் கூடியிருந்தார்கள். மந்திரம் ஆத்திரம் ஆத்திரமாகப் பேசிக் கொண்டிருந்தான். மற்றவர்கள் அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். சிவானந்தத்தைச் சுட்டுக் கொன்றுவிட வேண்டும் என்பதுதான் மந்திரத்தின் தீர்மானம்.

அதைச் சர்தாரும் ரங்கமணியும் ஏற்கவில்லை.

திருநெல்வேலியில் உள்ள வெள்ளையர்கள் அனைவரையும் ஒரே நாள் இரவில் கொன்று குவித்துவிட வேண்டும் என்பது ரங்கமணியின் தீர்மானம். அதையும் சர்தார் ஒப்புக் கொள்ளவில்லை. அவர் சொன்னார் : ''வெள்ளைக்காரர்களை இப்படித் தாக்குவதில் பயன் இல்லை. அதற்கேற்ற காலமும் இதுவல்ல. இந்திய தேசிய ராணுவம், நம்முடைய எல்லையில் நுழையும்போது செய்ய வேண்டிய காரியம் அது. இப்போது அவசரப்பட்டு எதையும் செய்து நாம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. ரங்கமணியின் பழி வாங்கும் ஆத்திரத்தை நான் நன்கு அறிவேன். அதற்குரிய காலம் வரும். மந்திரத்தின் யோசனையும் உசிதமல்ல. இந்த அடக்குமுறைக்குக் காரணம் சிவானந்தம் அல்ல. துப்பாக்கிச் சூடு நடந்தபோது சிவானந்தம் மயங்கிக் கிடந்தான். உண்மையில் கடும்படி தாண்டியது சிவானந்தத்தின் மனைவி கமலா தான். அவளுடைய சொல்லுக்குத்தான் சிவானந்தம் ஆடுகிறான். ஏன் போலீஸ் இலாகாவே அவளுக்குத்தான் பயப்படுகிறது. நம்முடைய அச்சகத்தைக்கூடச் சோதனையிட வேண்டும் என்று அவள் சொன்னாளாமே, அப்படித்தானே வடிவேலு? தம் பக்கத்திலிருந்த ஓர் இளைஞனை நோக்கித் திரும்பினார் சர்தார்.

வடிவேலு என்ற அந்த இளைஞன் அப்போது மீசையைத் தடவிக் கொண்டிருந்தான். இருபத்தைந்து வயதிருக்கும். போலீஸ் இலாகாவில் ரகசியப் போலீஸாக இருக்கிறான். அவன் சொன்னான்: ''சிவானந்தத்தின் மனைவிக்கு அச்சாபீஸ் மீது ஒரு கண் தான். சர்தாரின்மீது எப்படியோ அவளுக்குச் சந்தேகம் விழுந்துவிட்டது. நாமெல்லாம் கதர் உடுத்தாமல் இருந்தும்கூட அவளுக்கு எப்படியோ சந்தேகம் தோன்றியிருக்கிறது! அச்சாபீஸைத் திடீரென்று சோதனை போட வேண்டும் என்று ஒரு நாள் அவள் சொன்ன போது டெபுடி மறுத்து விட்டார். டெபுடிக்குச் சர்தார் மீது பூரண நம்பிக்கை உண்டு. இந்த அச்சாபீஸ் மீது அவருக்கு எவ்வித சந்தேகமும் கிடையாது. அந்த அம்மாள்தான் பெரிய பிரச்னையாக இருக்கிறாள். நம் நடவடிக்கைகளுக்கெல்லாம் அவள்தான் முட்டுக்கட்டை. அன்று நடந்த துப்பாக்கிச் சூட்டுக்குப்பழி வாங்க வேண்டும் என்றால் அவளைத்தான் பழிவாங்கவேண்டும்.''

''ஒரு பெண்ணைப் பழி வாங்குவதா?'' என்றான் முத்து முகத்தைச்சுளித்துக்கொண்டு.

''அன்று நடந்த விஷயத்துக்கு ஏதாவது பதிலுக்குச் செய்தேயாக வேண்டும். அது அந்தச் சம்பவத்துக்கு எதிர் நடவடிக்கை என்பதும் மக்களுக்குத் தெரிய வேண்டும்'' என்றான் மாணிக்கம் அழுத்தமாக.

''திரிவேணி விட்ட சவாலுக்கு நாம் பதில் சொல்லித்தானாக வேண்டும்'' என்றான் ரங்கமணி.

''திரிவேணிதான் அறிக்கை விட்டுவிட்டாளே! இதோ....'' என்று கூறிக் கொண்டே காசிலிங்கம், அச்சடித்த ஒரு காகிதத்தைச் சர்தாரிடம் நீட்டினான். அதைச் சர்தார் வாசித்து விட்டு ரங்கமணியிடம் கொடுத்தார்.

''இதற்கும் நமக்கும் சம்பந்தமில்லை. நம் விஷயத்தை நாம் கவனிப்போம். கமலாவை வெளியே விட்டு வைத்திருந்தால், இன்னும் என்னென்ன நடக்குமோ? நம்முடைய அச்சகத்தைத் திடீரென்று சோதனை போட்டாலும் போடலாம். இப்போது அவளைக் கடத்தி வருவது பற்றி முடிவு செய்யுங்கள்'' என்றான் ரங்கமணி இதைக் கேட்டுச் சிலர் திடுக்கிட்டனர். **(தொடரும்)**

# கௌரவ நடிகர்



'ஆத்தாரான்'

அதிருஷ்டம் என்றால் அந்த அழகப்பக் கோனருக்கு அடித்ததுதானையா அதிருஷ்டம்! 'அதிருஷ்டம்' என்றால் காணப்படாதது என்று தானே பொருள்? அழகப்பக் கோனர் ஒருவருக்கு அடித்த அதிருஷ்டம்தான் இப்படி யாருக்குமே தெரியவில்லை!

மேற்கு மலைத் தொடரில் 'கம்பம் பள்ளத்தாக்கு' செழிப்பான இடம். மலைவளமும், நிலவளமும் உள்ள பூமி. கம்பம் பள்ளத்தாக்கின் தென்கிழக்குப் பகுதியில் 'பச்சைக் குமாச்சி' என்ற ஓர் எஸ்டேட் இருக்கிறது. 'பச்சைக் குமாச்சி' அழகுக்கும் வளத்துக்கும் பெயர் பெற்ற இடம். ஏலச் செடிகளும், காப்பிச் செடிகளும் பிரம்மாண்டமான மரங்களும், செடி கொடிகளும், சலசலத்து ஓடும் தெளிந்த நீரோடைகளும், பலவிதப் பசுமைகளுக்கிடையே பளிச்சென்று தெரியும் வெள்ளைக்காரர்கள் கட்டிய பங்களாக்களுமாகக் காட்சி தரும் அந்த இடத்துக்குச் சென்றால் திரும்பிவரவே மனமிராது.

அந்தப் பச்சைக் குமாச்சிக்குச் செல்லும் பாதையில் தான், மலையடிவாரத்தை யொட்டிப் புதூர் இருக்கிறது. அழகப்பக் கோனரின் சொந்த ஊர் அதுதான்.

கோனருக்குப் புதூர் பிறப்பிடமாக இருந்தாலும் அவர் இருபத்து நாலு மணி நேரமும் மலையிலும், மலை அடிவாரத்திலும்தான் சஞ்சரித்துக் கொண்டிருப்பார். 'தாம் உண்டு, தம்முடைய இருபது ஆடுகள் உண்டு' என்ற அளவில் எந்த வம்பு தும்புக்கும் போகாமல் ஆடுகளைக் கட்டி மேய்க்கவே நேரம் போதாமல் காலத்தை ஓட்டி வந்தார். அடிவாரத்தில் ஒரு சிறிய குடிசையும், அதை யொட்டி ஆடுகளை அடைக்க ஒரு பட்டியும் போட்டிருந்தார்.

கோனர் இருந்த — ஆள் நடமாட்ட மில்லாத — அந்தப் பகுதிக்குத் திடீரென்று ஒருநாள் நாலைந்து லாரிகளும், இரண்டு மூன்று பளபளக்கும் கார்களும் வந்து சேர்ந்தன.

லாரிகளிலிருந்து சாமான்களை அவசரம் அவசரமாக இறக்கினார்கள். அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கெட்டித் துணிகளால் கூடாரங்கள் அடித்தார்கள். வந்தவர்கள் மொத்தம் ஐம்பது பேர்களுக்கு மேல் இருக்கலாம். இவர்களெல்லாம் யார்?

இராணுவத்தினரா?.... கல்லூரி மாணவர்களா? அதெல்லாம் இல்லை. 'கோபால்ராம் பிலிம்ஸ்' என்ற திரைப்படக் கம்பெனிக்காரர்கள்தான் படப்பிடிப்புக்காக, இந்த இடத்துக்கு இத்தனை தடபுடலாக வந்து சேர்ந்திருக்கின்றனர்.

சாயங்காலம் மலையிலிருந்து ஆடுகளை ஓட்டிக்கொண்டு அடிவாரம் வந்த கோனர் அங்கு அடித்துள்ள கூடாரங்களையும், மோட்டார்களையும் வியப்புடன் பார்த்தார். பிறகு 'நமக்கு ஏன் வம்பு?' என்று எண்ணியவராக, ஆடுகளைப் பட்டியில் அடைத்து விட்டுத் தம் குடிசைக்குள் புகுந்து கொண்டார்.

ஃ ஃ ஃ

மறுநாள் அதிகாலையில் இரண்டு பெரிய கார்கள் படகுகள் மிதந்து வருவது போல் அழகிய குலுக்கலோடு கூடாரமடித்திருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தன.

ஒரு காரிலிருந்து கட்டைக் குட்டையானஒரு மனிதர் இறங்கினார். அவரைத் தொடர்ந்து பருத்த சரீரமுள்ள இன்னொருவரும் இறங்கினார். முன்னவர் டைரக்டர்: பின்னவர் படமெடுக்கும் முதலாளி.

டைரக்டர் 'ஸ்லாக்'கும், 'பேண்ட்'டும், தலையில் அமெரிக்கப் பாணி தொப்பியும் வாயில் புகை பிடிக்கும் 'பைப்'புமாகக் காட்சி தந்தார்.











படமுதலாளி வழுக்கைத் தலையும், முழங்கால் வரை தொங்கும் சந்தனக் கலர் சில்க் ஜிப்பாவும், ஜரிகைத் துப்பட்டாவும் கழுத்தில் கண்டுவிரல் பருமனில் ஒரு தங்கச் சங்கிலியும், இடது கையில் வெள்ளியாலான வெற்றிலைப்பெட்டியுமாகக் காட்சியளித்தார்.

அடுத்த காரிலிருந்து இந்திரலோகத்து ரம்பை போல் 'நடிகைமணி' குஸுமகுமாரி இறங்கினாள். உயர்த்திக் கட்டிய கொண்டையும், கண்களில் கறுப்புக் கண்ணாடியும், முன் தலைப் பகுதியிலிருந்து தாடை வரை லாகவமாக இழுத்துக் கட்டிய 'கர்சிப்'பும், கழுத்தைச் சுற்றி இறுக்கமாக இரண்டு சரம் வெண்ணிறப் பாசி மணிகளும், மினுமினுக்கும் 'ரேயான்' சேலையும், தோள்பட்டையோடு நின்று விட்ட ஜாக்கெட்டும், கையில் டம்பப் பையுமாகத் 'தரிசனம்' சாதித்தாள்.

இவர்கள் வந்து இறங்கிய மறு நிமிடம் அங்கங்கே அரட்டை அடித்துக்கொண்டும், சீட்டாடிக் கொண்டுமிருந்த அனைவரும் ஓடி வந்தார்கள்.

டைரக்டர் ஒருமுறை சுற்றிலும் நோட்டமிட்டபடி "'லொகேஷன் செலக்ஷன்' ஆயிடிச்சா?" என்று கேட்டார். கூட்டத்தினுள்ளிருந்து ஒளிப்பதிவாளர் வெளியே வந்தார்.

"இங்கு வந்து சேரவே 'நைட் டென் ஓ' க்ளாக் ஆயிடிச்சு சார். இதோ, இப்போ கிளம்பி விடலாம்."

"என்ன ஸார், இப்போ கிளம்பி எப்போ 'லொகேஷன் செலக்ஷன்' செஞ்சு 'டேக்' எடுக்கிறது?" என்று டைரக்டர் அலுத்துக் கொண்டார்.

"எத்தனை நாளைக்கு இந்த இடத்தில் ஷூட்டிங்?" என்று கேட்டார் படமுதலாளி.

"ஒரு வாரத்தில் முடித்து விடலாம். டோன்ட் ஒர்ரி" என்று படமுதலாளிக்குத் தைரியம் கொடுத்தவாறு "யே...ஸ், கோ...ஆன்! டோன்ட் வேஸ்ட் எனி மோர் டைம்!" என்று உத்தரவிட்டார் டைரக்டர்.

அனைவரும் தத்தம் சாதனங்களுடன் மலையுச்சிக்குப் புறப்படத் தயாரானார்கள்.

ஃ ஃ ஃ

**வா**னளாவி நிற்கும் தேக்கு, நாங்கில், வெக்காலி, நாவல் மரங்களும்; உன்னிச் செடி படர்ந்த புதர்களும், ஊனான் கொடியும், மலைக் கொன்றையும் பின்னிப் படர்ந்து, ஆள் நிற்கவும் இடமில்லாமல் அடர்த்தியுடன் இருள் மண்டிக் கிடந்த அந்தக் காடு அல்லோல கல்லோலப் பட்டது!

இவ்வளவு அமர்க்களங்களுக்கு மிடையில், இவர்களிருந்த இடத்துக்குக் கீழ்ப்புறம், ஐம்பதடிக்கு அப்பால், ஒரு சிறிய நீரோடை கரை மேல் நீண்ட பருத்த மருத மரத்தின் அடி வேரில் தலையை வைத்து, எந்தவிதக் கவலையுமின்றி, அழகப்பக் கோனார், அரைக் கட்டைச் சுருதிக்கேற்ப மெல்லிய குறட்டை யொலியை இழைத்தவாறு தூங்கிக் கொண்டிருந்தார்! இவருடைய ஆடுகளோ அந்தச் சோலைக்கு அப்பாலுள்ள மேட்டு வெளியிலே புல் மேய்ந்து கொண்டிருந்தன. தும்பைப் பூ நிறத்தில்

தூய வெண்ணிறமான இரண்டு ஆட்டுக்குட்டிகள் அவருக்கு அருகில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன.

பதார்த்தங்களைத் தின்றும், பானங்களைக் குடித்தும் முடித்த பின், உயர்தரப் புகையிலையைத் தம் 'பைப்'பில் திணித்துக் கொண்ட டைரக்டர், அங்கு நடைபெறும் வேலைகளை மேற்பார்வையிட வந்தார்.

கோனார் படுத்திருந்த மரத்தடியில் வந்து நின்று தம் 'பைப்'பின் நுனியில் தீயை வைத்துக் கொண்டார். தம் காலடியில் குறட்டையொலி கேட்கவே குனிந்து பார்த்தார். கோனார் அயர்ந்த நித்திரையில் இருந்தார்.

''ஹூ இஸ் தட் மேன்?...யாரங்கே? இந்த ஆளைக் கொஞ்சம் எழுப்பி விடப்பா!'' என இரைந்தார் டைரக்டர்.

ஓர் ஆள் குடுகுடுவென்று ஓடி வந்து கோனாரை உலுப்பி விட்டான். அயர்ந்த தூக்கத்திலிருந்த கோனார், இரண்டு முறை புரண்டு விட்டு, பின் எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்து, நெட்டி முறித்தவாறு நீண்ட கொட்டாவி யொன்றை விட்டார்.

''யார் மேன் நீ?'' என்று டைரக்டர் கேட்டார்.

கோனார் அவரை உற்றுப் பார்த்து விட்டு, ''அளவப்பக் கோனாருங்க. இதே ஊருதானுங்க'' என்றார்.

''இங்கே ஏதய்யா ஊர்?''

''பக்கத்துலே புதூருங்க. நாற்பது வருஷமா இதே இடத்திலே தான் ஆடுகளை மேய்ச்சுக்கிட்டிருக்கேன்.''

''ஓகோ... சரி, எழுந்து என்னோடு இப்படி வாரும்'' என்றபடி டைரக்டர் நாவல் மரத்தடிக்கு விரைந்தார்.

கோனாரும் விரித்துப் போட்டிருந்த துண்டை எடுத்து உதறித் தோளில் போட்டுக் கொண்டு, அவர் அருகில்



விளையாடிக் கொண்டிருந்த இரண்டு வெள்ளை ஆட்டுக் குட்டிகளை எடுத்துக் கக்கத்தில் இடுக்கியவாறு டைரக்டரைப் பின்தொடர்ந்தார்.

நாவல் மரத்தடியில், குஸுமகுமாரி ஏதோ பட முதலாளியிடம் சொல்ல, அவர் உலகத்தில் இல்லாத அதிசயம் ஒன்றைக் கேட்டவர் போல் வாய் நிறையத் தேங்கியிருந்த வெற்றிலைச் சாறு வெளியே விழாதவாறு, கீழ் உதடுகளை மேல்புறமாகக் குவித்தபடி அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டிருந்தார்.

டைரக்டரோடு கோனரைப் பார்த்த பட முதலாளி, ''யாம் இவம்?'' என்று கேட்டுப் 'புளிச்'சென்று எச்சிலைத் துப்பினர்.

''பக்கத்து ஊராம். ஆடு மேய்ப்பவர்'' என்ற டைரக்டர் கோனரைப் பார்த்து, ''இப்படி உட்காருமே, ஐயா!'' என்றார்.

கோனர் தரையில் அமர்ந்தார்.

''பெரியவரே! இங்கே நிறைய எஸ்டேட் பங்களாக்கள் இருக்காமே? உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியுமுங்க. 'பச்சக் குமா...ச்சி'லே பெரிய பெரிய பங்களாங்க இருக்குதுங்க; அதோ, செங்குத்துப் பாறை தெரியுதுல்ல? அதைத் தாண்டிப் போனால், துரைமாருங்க பங்களா நிறைய இருக்குதுங்க; ஆனா, இப்பவே புறப்பட்டாத்தான் நல்லது.''

''ஏன்?''

''இது யானைக் காடுங்க! சாயந்திரமாச்சுன்னு திமுர் திமுருனு கூட்டம் கூட்டமா யானைங்க வரும்!''

அவ்வளவுதான்! டைரக்டரும் குஸுமகுமாரியும் பரபரப்புடன் எழுந்தனர். கூட்டத்திலிருந்தவர்களில் ஒருவனிடம் ''சரி, சரி; நீங்கள் வேலையை முடித்து விட்டு இருபது பேர் அடிவாரம் போங்கள். மீதிப்பேர் இங்கேயே தங்கிக் கொள்ளுங்கள். நாங்கள் எஸ்டேட் பங்களா ஒன்றைத் தேடிப் பிடித்து அங்கி ந்துவிட்டுக் காலையில் வருகிறோம்'' என்று கூறிவிட்டு டைரக்டர் புறப்பட்டார். குஸுமகுமாரியும் எழுந்து அவரைப் பின்தொடர்ந்தாள்,

''சட், சனியன்கள்! இரண்டு நாட்கள் ஓடிவிட்டன. படப் பிடிப்போ, ஓர் எழவையும் காணோம்! பணம் தாறுமாறுய்க் கரைவதுதான் மிச்சம்!'' என்று முணுமுணுத்தபடி முகத்தைச் சுளித்துக் கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தார் பட முதலாளி.

ஃ ஃ ஃ

அடுத்த நாள் படப்பிடிப்பு வேலைகளில் அனைவரும் மும்முரமாயினர்.

நாவல் மரத்தடியில் டைரக்டரும் பட முதலாளியும், நடிகைமணியும் உட்கார்ந்திருந்தனர். குஸுமகுமாரி 'மேக்கப்'புடன் வந்திருந்தாள். முதல் நாளைப் போலவே கோனர் ஆட்டுக்குட்டிகளை அணைத்தபடி தரையில் அமர்ந்திருந்தார்.

டைரக்டர் கோனரை உற்றுப் பார்ப்பதும் பிறகு யோசனை செய்வதுமாக இருந்தார். பட முதலாளியிடம் ஏதோ சைகை காட்டினர். முதலாளியோ ஒன்றும் புரியாமல் விழித்தார். பிறகு அவரை ஒரு தனி இடத்துக்கு அழைத்துச் சென்று கோனரைச் சுட்டிக் காட்டி ஏதோ ரகசியமாகச் சொன்னர்.

நடிகைமணியோ, தன் இடது கையில் வேலைப்பாடமைந்த சிறிய கண்ணாடியை முகத்துக்கு நேரே நீட்டியபடி தலை முடியை ஒழுங்குபடுத்திக் கொண்டும், உதட்டுச் சாயத்தைச் சரி செய்து கொண்டும் இருந்தாள்.

பட முதலாளியும் டைரக்டரும் நாவல் மரத்தடிக்கு வந்தனர். டைரக்டர் குஸுமகுமாரியின் காதில் ஏதோ முணுமுணுத்தார். அவள் தன் கையிலுள்ள கண்ணாடியின் பார்வையிலிருந்து நழுவாமலே தலையை ஆட்டினாள். டைரக்டரின் முகம் மலர்ந்தது.

''பெரியவரே, உமக்கு நல்ல யோகமய்யா! உம்மைப் படம் பிடிக்கப் போகிறோம்'' என்றார் டைரக்டர்.

கோனருக்கு ஒன்றும் விளங்கவில்லை. ''எனக்கு எதுக்குங்க படம்? படத்தை மாட்டி வைக்கத் தோதாக எனக்கு வீடு இல்லீங்களே?'' என்றார்.

டைரக்டர் அவரிடம் எப்படிப் பேசவேண்டுமோ அப்படிப் பேசிச் சம்மதிக்க வைத்தார்.

மறுகணமே கதாசிரியர் வரவழைக்கப் பட்டார்.

''இந்தாய்யா! இந்தப் பெரியவரை வைத்துப் படம் எடுக்க உத்தேசித்து விட்டோம். இவருக்கு வசனம் ஒன்றும் தேவையில்லை. இவர் பேசுவது பேசியபடியே இயற்கையாக இருக்கட்டும். இவர் பேசுவதற்குக் குஸுமா எப்படிப் பதில் சொல்ல வேண்டும் என்பதை மட்டும்...''

''தகுந்தாற்போல் எழுதி விட்டால் போயிற்று.''

''நீர் ஒன்றும் எழுத வேண்டாமய்யா. பெரியவர் சொன்னதற்கு எப்படிப் பதில் சொல்ல வேண்டும் என்று ஓர் 'ஐடியா' கொடுத்தால் போதும்; குஸுமகுமாரி 'அதை'க் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும்.''

''ஆமாம்; 'இன்னதற்கு இப்படிச் சொல்ல வேண்டும்', 'அதற்கு அப்படிச் சொல்ல வேண்டும்' என்று இலேசாகத் தொட்டுக் காண்பித்து விட்டால் போதுமே, பிடித்துக் கொள்கிறேன். இதென்ன பிரமாதம்?'' என்று எம். ஏ. படித்தவள்போல் அலட்சியச் சிரிப்புடன் கூறினாள் நடிகைமணி.

''ஆகா, அப்படியே செய்துவிடுவோம்!'' என்று தலையைச் சொறிந்தார் கதாசிரியர்.

''சரி, சரி, புறப்படுங்கள்! இப்போதே ஒத்திகை பார்த்துவிட்டுக் கையோடு கையாகப் படப் பிடிப்பையும் ஆரம்பிக்கலாம்'' என்று புறப்பட்டார் டைரக்டர்.

''தாத்தா! அந்த ஆட்டுக் குட்டிகள் ரொம்ப அழகாக இருக்கின்றன. ஒன்றை எனக்குத் தருகிறீர்களா?'' என்று கேட்டு விட்டுக் கோனரின் பதிலையும் எதிர்பார்க்காமல், 'வெடுக்'கென்று ஒரு குட்டியைப் பறித்துக் கொண்டு கேமராவின் முன் போய் நின்றாள் நடிகைமணி.

குஸுமகுமாரி, மற்ற நடிகைகளைப்போல் இல்லாமல் கொஞ்சம் இயற்கை அழகு படைத்தவள். இதில் செயற்கை அழகும் வேறு சேர்ந்து கொண்டது. இது போதாதா, அவள் செய்யும் அட்டகாசத்துக்கு?

படப் பிடிப்பு ஆரம்பமாயிற்று. கேமரா முன் நின்று ஒருவன் 'கிளாப்ஸ்' அடித்தான்.

''டேக்!'' என்று கத்தினார் டைரக்டர்!

அடுத்த கணமே, சந்தைக் கடை இரைச்சலோடிருந்த அந்த இடம் மயான அமைதி பெற்றது. விளக்குகள் ஒளியைச் சிந்தி இருண்ட காட்டை ஒளிமயமாக்கின. 'பிலிம் ரெக்கார்ட'ரை இணைத்த ஒலிபெருக்கியிலிருந்து பெண்ணின் இனிமையான குரல் எழுந்தது. அதைத் தொடர்ந்து, ஆட்டுக் குட்டியை அணைத்தபடி குஸுமா குமாரி ஆடினாள். கேமராக்கள் சுழன்றன. அவள் ஆட்டத்தைப் பல கோணங்களில் படம் பிடித்தனர்.

''கட்! கட்!'' என்றார் டைரக்டர். இயந்திரங்கள் ஓய்ந்தன. ஆட்டம் நின்றது. மீண்டும் சலசலப்பு...அப்புறம் என்ன?

விறுவிறுப்புடன் இடை விடாமல் படப் பிடிப்பு இரவு பகலாக நடைபெற்றது. கோனாரின் ஆடுகளைப் பார்த்துக் கொள்ளவும் அவற்றை அடிவாரத்தில் உள்ள பட்டியில் அடைக்கவும் இரண்டு ஆட்களை நியமித்தனர்.

கோனாரைக் குஸுமகுமாரியுடன் பேச வைத்துப் பல கட்டங்களாகப் படமாக்கினர். அவரை ஒரு மொட்டைப் பாறையில் உட்கார வைத்தும், பச்சைக் கூமாச்சியில் உள்ள வெள்ளைக்காரர்களின் பங்களாக்களிலும், நீர்வீழ்ச்சிகளுக்கடியிலும், நீரோடைக் கரைகளிலும் வைத்துப் படம் பிடித்தனர். அவருக்கு ஓய்வு கொடுக்காமல் இரவு பகலாக அந்த வட்டாரம் முழுவதும் இழுத்தடித்தனர். அவரோடு அவரது ஆடுகளையும் மேயவிட்டுப் படம் பிடித்தார்கள்!

கோனாருக்கு இவையெல்லாம் புது அனுபவமாக இருந்ததோடு வேடிக்கையாகவும் இருந்தது.

இப்படி ஆறு நாட்கள் படப் பிடிப்பை நடத்தி முடித்தனர். உண்மையில் சினிமாப் பித்துப் பிடித்தவர்கள் ' அந்த இடத்துக்கு வந்து 'கதையைத் தெரிந்துகொள்வோம்' என்று ஆசையோடு இவர்கள் நடத்திய படப் பிடிப்பைப் பார்த்திருந்தால் நிச்சயம் மூளை குழம்பித் திண்டாடிப் போவார்கள். தலையும் இல்லாமல் வாலும் இல்லாமல் எதை எதையோ படம் எடுத்துத் தள்ளினார்கள்.

ஃ ஃ ஃ

ஏழாம் நாள் காலையில் புறப்படுவதற்கு எல்லோரும் மூட்டை முடிச்சுகளைக் கட்டினர்.

டைரக்டர் பட முதலாளியிடமிருந்து ஐம்பது ரூபாயை வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு, ''மிக்க நன்றி, பெரியவரே! உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டும்?'' என்று கேட்டார்.

''பணமா? எதுக்குங்க?''

''கூச்சப்படாதீர்கள், தாத்தா! இந்தாருங்கள்!'' டைரக்டரிடமிருந்த ரூபாய் நோட்டுக்களைப் பிடுங்கிக் கோனாரின் கையில் திணித்தாள் குஸுமா குமாரி.

கோனாருக்குக் கைகள் வெடவெடத்தன. 'எதற்கு இந்தப் பணத்தைக் கொடுக்கிறாள்?' என்று நினைத்தவராய் ரூபாய் நோட்டுக்களை வெறித்துப் பார்த்தார்!

''தாத்தா, தாத்தா...! அந்த ஆட்டுக் குட்டிகளில் ஒன்றை எனக்குக் கொடுத்தால் என்னவாம்?'' என்று கொஞ்சியவாறு கைகளை நீட்டினாள் நடிகைமணி.

# விளம்பரம் கொடுத்தது யார்?









'அட கடவுளே! மொத்தமாக இவ்வளவு ரூபாயும் கொடுத்துவிட்டுப் போயும் போயும் இந்த ஆட்டுக் குட்டியைக் கேட்கிறாளே!' என்று நினைத்த கோனார், ஒரு வெண்ணிறக் குட்டியைக் குஸுமாவிடம் நீட்ட, மறுகணம் வெகு லாகவமாக நடிகைமணியின் அணைப்பில் சிக்கியது அது!

மத்தியானத்துக்குள் எல்லாரும் புறப்பட்டு விட்டனர். அந்தக் காடு வெறிச்சோடி விட்டது.

கோனார் மட்டும் தனிமையில் நின்றார்!

இந்த ஒரு வாரத்தில் நிகழ்ந்தவையெல்லாம் அவருக்குக் கனவில் நடந்தவை போல் தோன்றின. பிரமை பிடித்தவராய் நாவல் மரத்தடிக்குச் சென்றார்.

கண்களை மூடியபடி தம் கையில் முடங்கிக் கிடந்த ஓர் ஆட்டுக் குட்டியை நீவிக்கொடுத்தவாறு உட்கார்ந்திருந்தார் கோனார்.

கோனாரை நோக்கி ஓடி வந்த அதிர்ஷ்டமோ, அவரோடு ஒரு வாரம் தங்கியிருந்து விட்டு, அவருக்கு ஐம்பது ரூபாயைக் கொடுத்து, அவர் கரங்களில் பாசப் பிணைப்போடு தவழ்ந்து கொண்டிருந்த இரு குட்டிகளில் ஒன்றைப் பிடுங்கிக் கொண்டு பறந்து விட்டது!

ஃ ஃ ஃ

'இடையன் மகள்' படம் வெளியாகும் நாள் நெருங்கியது. 'வருகிறது இடையன் மகள்' என்ற கொட்டை எழுத்துடன் கோனாரின் விதம் விதமான உருவங்கள் பொறித்த வண்ணப் 'போஸ்டர்'களை முக்கியமான நகரங்களில், முச்சந்திகளிலும், மூலைமுடுக்குகளிலும் இன்னும் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் ஒட்டி வைத்தார்கள்.

'இடையன் மகள்' படம் சுவிட்சர்லாந்திலும், ஆல்ப்ஸ் மலைக் காடுகளிலும் எடுக்கப்பட்டதாகவும், அந்தப் படத்தில் 'எட்வர்டு பர்னாண்டஸ்' என்ற ஹாலிவுட் நடிகர், கௌரவ நடிகராக வருவதாகவும், அவர் ஒரு கிழப் பாத்திரத்தில் நடித்திருப்பதாகவும் செய்திகளை வெளியிட்டனர்.

படம் திரையிடப்பட்டது.

கதை இதுதான்: உலகமே தெரியாத ஓர் இடைச்சாதிக் கிழவரைப் பார்க்கிறாள் ஒரு 'ஸ்டார்'. செயற்கை உலகில் சலித்துவிட்ட அவளுக்கு, இயல்பாக வாழும் அந்தக் கிழவனாரைப் பிடித்துப் போய் விடுகிறது. அவருக்கு அவளுடைய உலகம் புரியவில்லை. தம் இயல்புப்படியே வாழ்கிறார், பேசுகிறார். அவ்வளவுக்கும் ஈடு கொடுக்கிறாள் அவள். கடைசியில் அவரது எளிமையைத்தான் பெறுவதற்குப் பதில் தமது பகட்டை அவர் எங்கே பெற்று விடுவாரோ என்று பயந்து அவரை விட்டு வந்து விடுகிறாள் நடிகை.

கதை அவ்வளவுதான். இதற்கிடையில் ஆடல் பாடல்கள்; வில்லன் தொந்தரவுகள்; குத்துச் சண்டை, துப்பாக்கிச் சண்டைகள் எல்லாம் சம்பந்தமில்லாமல் சேர்க்கப்பட்டிருந்தன.

படம் சக்கைப் போடு போட்டது. தினசரி எல்லாக் காட்சிகளும் 'ஹவுஸ்புல்'லாயின. வைர விழா கொண்டாடப்படும் போலிருந்தது. ரசிகர்கள் மத்தியில் எட்வர்டு பெர்னாண்டஸின் பெயர் அதிகமாக அடிபட்டது.

நடிகைமணி குஸுமகுமாரியின் புகழ் இன்னும் ஒரு படி உயர்ந்தது! அவளது பேட்டியைப் பத்திரிகைகள் பத்தி பத்தியாக வெளியிட்டன. சுவிட்சர்லாந்தில் நடிக்கும் போது அந்நாட்டு நடிகர் எட்வர்டு பெர்னாண்டஸ், தனக்கு ஓர் ஆட்டுக் குட்டியை அன்பளிப்பாகக் கொடுத்ததாகவும், அதைப் பெர்னாண்டஸ், டென்மார்க்கில் நானூறு டாலர் கொடுத்து ஆசையோடு வாங்கியதாகவும், அந்த ஆட்டுக் குட்டிக்கான உணவு வகையிலிருந்து அத்தனையும் விவரமாகப் பேட்டியில் கூறியிருந்தாள் நடிகைமணி. அவள் படத்தோடு டென்மார்க் ஆட்டுக் குட்டியின் படமும் பேட்டிக் கட்டுரையுடன் வெளியாகி யிருந்தது!

ஃ ஃ ஃ

பட முதலாளி தம் 'குளுகுளு' அறையில் 'இடையன் மகள்' படம் வெற்றி நடைபோடும் மிதப்பில், சகாக்களுடன் சோபாவில் அமர்ந்தபடி, தமது அநுபவங்களையும் வீரப் பிரதாபங்களையும் விளாசித் தள்ளியவாறு வெற்றிலையை மேய்ந்து கொண்டிருந்தார்!

அதே நேரத்தில் —

ஞாயிற்றுக்கிழமைச் சந்தையில், கைச் செலவுக்காக இரண்டு ஆடுகளை விற்றுவிட்டு ஒரு ஹோட்டலில் நுழைந்து இரண்டு வெங்காயத் தோசைகளைத் தின்று கொண்டிருந்தார் அழகப்பக் கோனார். அவருக்கு எதிர்ப்புற மேஜையைச் சுற்றி, நாலைந்து கல்லூரி மாணவர்கள் சாப்பிட்டுக் கொண்டே 'இடையன் மகள்' படத்தை வானளாவப் புகழ்ந்தபடி விமரிசனம் செய்து கொண்டிருந்தனர்.

''இடையன் மகள் எப்படி?''

''ஹைகிளாஸ் பிக்சர்டா!''

''எட்வர்டு பெர்னாண்டஸ் என்ற ஸ்விஸ் ஆக்டர் என்ன பிரமாதமாய் நடித்திருக்கிறான், பார்த்தாயா?''

''ஆமாம்; அவன் கௌரவ நடிகனாக வருகிறான். அவன் நாட்டில் ஒரு படத்துக்கு இருபது லட்சம் டாலர் வாங்குகிறானாம். வெளிநாட்டுப் படப் பிடிப்புக்குச் சென்றால் அவனுக்கென்று தனி விமானம் ஏற்பாடு செய்ய வேண்டுமாக்கும்!'' என்று எல்லாம் தெரிந்தவன் போல் ஒருவன் அளந்தான்.

இவர்கள் பேசியதை எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல், தோசையைத் தின்று முடித்துவிட்டு இலையைச் சுருட்டிக் கையில் வைத்தபடியே கல்லாப் பெட்டிக்கு முன் வந்து சில்லறை கொடுத்துவிட்டு, வாசலில் கட்டியிருந்த தம் ஆட்டுக்குட்டியின் வாயில் இலையை அன்போடு திணித்தார் கோனார். அதனிடம் கொச்சைத் தமிழில் இச்சை மொழிகளைப் பேசிக் கொண்டே கட்டை அவிழ்த்தார். ''டேய், பெர்னாண்டஸ் மாதிரி தாண்டா இந்தக் கிழவரும் இருக்கார். ஆனால் அவனுக்குக் கிராம வாழ்க்கையும் கிராமத் தமிழும் இவரைவிட 'நாச்சுரலா' வரதுடா'' என்று அந்தக் கல்லூரி மாணவர்களில் ஒருவன் கூறி, கௌரவ நடிகர் கோனாரை மேலும் கௌரவப்படுத்தினான்.

## முகூர்த்த நாள்

ராஜுவின் தங்கை உமா முகூர்த்த நாளுக்கு முன்பே ஒரு கயவனிடம் கற்பைப் பறிகொடுத்ததன் காரணமாகத் தற்கொலை செய்து கொண்டு விடுகிறாள். அதன்பிறகு தான் திரைக்கதை பிழைத்துக் கொள்கிறது. தங்கையினுடைய வாழ்வை அழித்தவனைப் பழிக்குப்பழி வாங்கத் துடிக்கிறான் ராஜு.

ராஜுவாக வரும் ஜயசங்கருக்கு இந்தப் படத்தில் நல்ல வாய்ப்பு. நன்றாய்ப் பயன் படுத்திக் கொண்டிருக்கிறார் அந்த வாய்ப்பை. அவர் நடிப்பில் துடிப்பு இருக்கிறது.

முத்துராமன் ராஜுவின் நண்பன் சரவணனாக வருகிறார். உமாவின் வாழ்வைப் பறித்தவன் தன் தம்பிதான் என்று அறிந்து துடிக்கிறான் சரவணன். அதிலிருந்து முத்துராமன் நடிப்பில் களை கட்டுகிறது. துயரம் மிகுந்த அப்பாத்திரத்துக்கு உயிர் கொடுத்திருக்கிறார்.

நாகேஷ் — மாதவி தமாஷ் கொஞ்சம் அசடு வழிகிறது என்றாலும் நாகேஷின் நடிப்புத் திறமை காப்பாற்றுகிறது. மாதவி தூங்கிக் கொண்டிருக்கும்போது அவளை நெருங்கவும் முடியாமல், விலகியோடவும் முடியாமல் விரசிங்கம் படும் அவஸ்தை நாகேஷின் நடிப்புக்கு ஒரு முத்தாய்ப்பு.

கே. ஆர். விஜயா தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யும் பெண்ணாக வந்து ஜயசங்கரைத் தன் அன்புப் பிடியில் சிக்க வைக்கும் சாகசம் நன்றாயிருக்கிறது. ''யோவ்! நீ என்னை விட்டு எங்கே ஓடினாலும் அங்கெல்லாம் நான் உன் நிழலைப்போலத் தொடர்ந்துகிட்டு வருவேன்'' என்று கூறிவிட்டு அவர் ஜயசங்கரைப் பார்க்கும் ஏக்கம் கலந்த பார்வை ஒன்றே போதும்.

புதுமுகம் சந்தியாராணிதான் ராஜுவின் தங்கை உமா. அவருக்கு நிறையவே சான்ஸ் கொடுத்திருக்கிறார்கள்.

''நடந்தது நேற்று முடிந்தது'' என்ற பாட்டு நன்றாயிருக்கிறது. ஜயசங்கரும், விஜயாவும் ஆடும் கரக ஆட்டம் விறு விறுப்பாயிருக்கிறது. சிரமப்பட்டு ஆடியிருக்கிறார்கள்.

மாதவன் படத்தை நன்றாய் டைரக்ட் செய்திருக்கிறார்.

அருண் பிரசாத் மூவிஸின் தயாரிப்பான ''முகூர்த்த நாள்'' வழக்கமான கதைப் போக்கிலிருந்து மாறிக் கொஞ்சம் புதுமையாயிருக்கிறது. அதுவே பாராட்டப்பட வேண்டிய அம்சம்தானே !





## கபன்

பெண்ணின் நகையாசையும் ஆணின் போலி கௌரவமும் வாழ்க்கையில் எவ்வளவு தூரம் விளையாடி வினையாக முடிகிறது என்பதைச் சித்திரிக்கும் இந்தக் கதையின் நாயகி 'ஜால்பா'வாகச் சாதனாவும், நாயகன் ரமாநாத்தாக சுநீல்தத்தும் நடிக்கிறார்கள். இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நடைபெற்றதாகப் புனையப்பட்டிருக்கும் நவீனத்துக்கேற்பச் சூழ்நிலையையும் உருவாக்கியுள்ளார்கள்.

இப்படத்தில் காதல் கண்ணியம் பெற்று விளங்குகிறது. சோகம் கண்ணீர் விட்டு மிளிர்கிறது. 'தும்பின ஸஜன பர்ஸே நயன்' போன்ற கருத்துச் செறிந்த பாடல்கள் செவிக்கு இனிமை பாய்ச்சுவதோடு, இதயத்துக்கும் இசைவாக இருக்கின்றன. மிகுதியான பாத்திரங்களுடைய இக்கதையில் பாத்திரப் படைப்பை மனத்தில் கொள்ளாமல் கதையை நடத்திச் செல்வதால் எந்தப் பாத்திரமும் மனத்தில் நிற்காதது பெருங் குறை.

ஹிந்தி இலக்கியத்தில், 'நாவல் சக்கரவர்த்தி' என்னும் விருது பெற்றவர் முன்ஷி பிரேம்சந்த். கையாடல் என்னும் பொருள் தரும் நவீனம் 'கபன்'. தமிழில் 'கல்கி'யில் தொடர்கதையாகச் 'சந்திர ஹாரம்' என்னும் தலைப்பில் வெளியாகி ரசிகர்களின் பாராட்டைப் பெற்றது. அந்தக் கதையைத் தழுவிய இந்தப் படம் பிரேம்சந்தரின் விஷயத்தில் முழு நியாயம் வழங்கியிருப்பதாகக் கூற முடியாது. இருந்தாலும், பல சிறப்பான அம்சங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு, மற்றப் படங்களோடு ஒட்டாமல் தனித்து நிற்கிறது.

## அத்தியாயம் 3

பன்னிரண்டு கட்டுரைகளில் ஆறு கட்டுரைகள் பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன என்ற திருப்தியுடன் அகிலா வீடு திரும்பியபோது மணி ஒன்றடித்து விட்டது. வேதியர்கள் சாப்பிட்ட களைப்புத் தீரத் திண்ணையில் அங்கவஸ்திரத்தைச் சுருட்டித் தலையணையாக வைத்துப் படுத்திருந்தார்கள்.

அவள் நிதானமாக ஹாலைக் கடக்கையில், ''அகிலா!'' என்ற குரல் கேட்டது.

''என்ன அப்பா?'' என்று கேட்டுக் கொண்டே அகிலா கோதண்டராமன் இருந்த அறையை நோக்கிச் சென்றாள்.

''ஏன் அகிலா, நடுவிலேயே போய் விட்டாய்?''

''வேலை இருந்தது அப்பா...''

''ஹோமம் முடிந்ததும் எல்லோருமா சேர்ந்து சாப்பிடணும்னு ஆசைப்பட்டேன். ரவிதான் இல்லை...நீயாவது இருந்திருக்கப்படாதா...?''

''அதுதான் உங்க ராஜா, நீங்கள் பெறாத பிள்ளை இருந்தானே, போறாதா...''



''உனக்கு ஏன் அம்மா அவன்பேரிலே இவ்வளவு க்ஷாத்திரம்?''

''உங்களுக்கு வேண்டுமானால் அவன் அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கலாம். ஆனால் அவன் எனக்கு அட்வைஸர் இல்லையே?''

''ஏன், என்ன அட்வைஸ் பண்ணினான்?''

''என்ன பண்ணவில்லைன்னு கேளுங்கோ. எல்லாவற்றிலும் தலையிடுகிறான்... ரவிகிட்டேயும் சரி, என்கிட்டேயும் சரி, ஏன், சொல்லப்போனால்

## மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

பு.வி.ஆர்

அம்மாகிட்டே கூட அவன் அதிகாரம் செய்யப் பார்க்கிறான்.''

''கெட்டிக்காரப் பிள்ளை அகிலா..''

''உங்கள் பிஸினஸுக்குக் கெட்டிக்காரனாக இருக்கலாம்... அதுதான் நீங்கள் இன்னும்வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்!''

''என் பிஸினஸைக் குளோஸ் பண்ணப் போறேன். அகிலா... இனிமேல் நான் யாருக்குச் சம்பாதிக்கணும்...''

''இந்த மாதிரிப் புத்தி அன்றைக்கே வந்திருந்தால், உங்களுக்கு உடம்புக்குக் கூட வந்திருக்காது... ஆனா, நீங்க பிஸினஸை நிறுத்தினாலும், பிரைவேட் செக்ரடரியை விடமாட்டீர்களே. அவன் உங்களுக்கு ஒரு 'வாக்கிங் ஸ்டிக்' மாதிரி ஆகிவிட்டான்.''



''அவனை மறந்துடு அம்மா... புத்திசாலிப் பையன், சுறுசுறுப்பாக இருக்கிறான். உங்க எல்லார்கிட்டேயும் ஒட்டிப் பழகணும்னு பார்க்கிறான்.''

''எல்லாம் தூரத்திலேயே இருந்து கொள்ளட்டும்'' என்ற அகிலா, ''அதிலும் இந்த இரண்டு மாசமா நீங்க படுக்கையிலே படுத்த நாளிலிருந்து அவனுடைய அதிகாரமும், தோரணையும் சகிக்கவில்லை..'' என்று முடித்தாள் அகிலா.

''நான் கவனிச்சுக்கிறேன்'' என்று கோதண்டராமன் முணுமுணுத்தார்.

அகிலா சாப்பிடச் சென்றாள். என்றைக்குச் சந்தர்ப்பம் வாய்க்கிறதோ, அன்றைக்கே ராஜாவை இந்தப் பங்களா பக்கம் கால் வைக்காதபடி கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட வேண்டும் என்று அவள் மனம் கறுவியது. அவன் பொய்க் கணக்கு எழுதுகிறவன் என்று சீமாச்சு அடிக்கடி அவளிடமும் ரவியிடமும் சொல்லுவான். சீமாச்சு யோக்கியன் அல்லதான். ஆனால் ராஜா தேனொழுகப் பேசி, அப்பாவைக் கையில் போட்டுக் கொண்டு அகப்பட்டதைச் சுருட்டுகிறவனாச்சே? என்றாவது ஒரு நாள் அப்பா இப்போதிருக்கும் நிலையைத் தனக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டு அவன் நன்றாக ஏமாற்றப் போகிறான்! அப்போதுதான் இந்த அப்பாவுக்கும் புத்தி வரும்!

ராஜாவைப் பற்றி நினைக்க நினைக்க மூண்டெழுந்த ஆத்திரம் திடீரென்று சந்தானத்தின் நினைவு தோன்றவே தணிந்தது. சந்தானம் முதன் முதலாகக் குமாஸ்தா வேலைக்கு வந்தபோது அகிலாவுக்குப் பதின்மூன்று வயதுதான் இருக்கும். கண்ணில் படுவது மனத்தில் பதியும் பருவம். தான் சம்பளத்துக்கு வேலை செய்கிறவன் என்பதை ஒருநாளும் மறக்காமலேயே இருந்தான் சந்தானம். இன்று ராஜாவுக்கு இடம் கொடுத்திருப்பது போலத்தான் அவனுக்கு அன்று எல்லாச் சலுகைகளும் இருந்தன. ரவியும் அவனுடன் சிநேகபாவத்துடன் பேசினாலும் சந்தானம், சற்று ஒதுங்கியே நடந்து கொண்டான். அவனைவிட ஏழெட்டு வயது சிறியவள் அகிலா. என்ன வேண்டுமானாலும், அவன் தான் பெரியவன் என்ற தோரணையில் அகிலாவுடன் பேசியிருக்கலாம்; அவள் செய்த சிறு குற்றங்களுக்குக் கண்டித்திருக்கலாம். ஆனால் என்றுமே சந்தானம் அவள் மனத்தை நோக அடித்ததில்லை. ஒருசமயம் அப்பா, 'பெண்ணுக்கு இங்கிலீஷும் கணக்கும் வரதில்லை... நீ ஒரு இரண்டு மாசம் சொல்லிக்கொடேன்' என்று சந்தானத்திடம் கேட்டுக் கொண்டிருந்தார். அந்த இரண்டு மாதங்களில் சந்தானத்தைப் பூரணமாக அறிந்து கொள்ள அகிலாவுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. அதன் பின் அவர்களுக்கிடையே அசைக்கமுடியாத பரஸ்பர அன்பும் சிநேகமும் உண்

டாகிவிட்டன. அதன்பின் இருவரும் வெவ்வேறு திசைகளுக்குச் சென்று விட்டார்கள். பெரிய உத்தியோகத்தை நாடிச் சந்தானம் செல்ல, மேல் படிப்பை நோக்கி அகிலா புறப்பட்டு விட்டாள். இருவரும் சந்தித்துப் பேசுவதே அபூர்வமாகி விட்டது. ஆனல் அகிலா சந்தானத்தை எப்போது பார்த்தாலும், அந்த இரண்டு மாதங்களை மனத்தில் நினைத்து மகிழ்ந்துபோவாள். அவனுக்கு அந்நாட்களை யெல்லாம் நினைவுபடுத்துவாள்.

இன்றும் சந்தானம் பண்பும் நெறியும் தவருமல்தான் அவளுடன் நடந்து கொள்கிறன். அவன் அருகே இருக்கையில் இன்னும் நெருங்கிப் பழக மாட்டானு என்ற ஆதங்கமும் ஏக்கமும் தான் அவள் மனத்தில் எழுகின்றன.

அந்த உத்தமனே இந்த அயோக்கியன் இருக்கும் இடத்தில் இருந்திருந்தால்?

கேள்வியே அகிலாவை ஓர் உலுக்கு உலுக்கியது. ஒருவேளை அவளுடைய வாழ்க்கையே திசை மாறியிருக்குமோ! நண்பனுகவும், ஆசிரியனுகவும் இருந்த சந்தானம் அவளுடைய தகப்பனருக்கு வெறும் காரியதரிசியாக மட்டுமல்லாமல் அவளையே ஆட்கொண்டவனுக இருந்திருப்பானே?

வேண்டா வெறுப்புடன் எழுந்த அகிலா, தான் சாப்பிடாமல் சந்தானத்தைப் பற்றியே நினைத்திருந்தோம் என்பதை உணர்ந்தாள். அவள் தன்னைத் தானே சபித்துக் கொண்டாள்! அகிலா மட்டும் அவனைப் பற்றி நினைப்பானேன்? அவனுக்கு அவளைப் பற்றிய சிந்தனையே இல்லாதபோது? திடீரென்று சந்தானத்தின் மீது கோபம் பிறந்தது. அவன் இப்போதெல்லாம் ரவியைப் பார்ப்பதற்கோ அல்லது அப்பாவைப் பார்ப்பதற்கோ வருவதில்லை. வந்தால் அவளையும் அம்மாவையும் கண்டு குசலம் விசாரித்து விட்டுப் போவான்.

ஒருவேளை அவன் வராமலிருப்பதற்குக் காரணமும் இந்த ராஜாதானே? சீமாச்சுகூடச் சொன்னுன். அப்பாவைப் பார்க்க அவன் கடைசியாக வந்திருந்த போது ராஜா அவனை வழிமறித்து நிறுத்தினுன் என்று! அவளும் சந்தானமும் முன்னெல்லாம் ஹாலில் உட்கார்ந்து, நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பதை ராஜா கவனித்திருக்கிறுன். இயற்கையான பொறுமைக் குணம் ராஜாவிடமும் இருக்கிறது போலிருக்கிறது. அதனுல்தான் சந்தானத்தை அப்பாவைப் பார்க்கவொட்டாமல் அடித்திருக்கிறுன். ஒருநாள் இதைப் பற்றி ராஜாவிடமே விசாரிக்க வேண்டும்.

திடீரென்று சந்தானத்தின் மீது வந்த கோபம் வந்தது போலவே மறையவே, அவளுடைய மனத்தில் திருப்தியும் சாந்தியும் பிறந்தன. அக்கணத்தில் அவளுக்கு ராஜா மீது இருந்த வெறுப்பு கூட மறைந்து விட்டது.

ஃ ஃ ஃ

அன்று சாயங்காலம் அவள் சொப்பனத்திலும்எதிர்பார்க்காதது நடந்தது.

சுமார் ஐந்து மணிக்குப் போர்ட்டிகோவில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து வயதான ஒருவரும் சந்தானமும் இறங்கினர்கள்.

''ஹலோ மிஸ்டர் சந்தானம்! இன்னிக்கு வெறும் மழை மட்டும் வராது, பிரளயமே வந்து விடும்...''

''சௌக்கியமா அகிலா... உன்னைப் பார்த்து ஒரு யுகமே ஆன மாதிரி இருக்கு... ரவி ஊரிலே இருக்கானு இல்லையா? .... அப்பாவைப் பார்க்கத் தான் வந்திருக்கோம்... இவர்தான் என்னுடைய முதலாளி... ஸார், அகிலாவைப் பார்த்திருக்கிறீர்களா?... ஷி இஸ் நௌ எ ரைட்டர்!''

''சின்னப் பெண்ணு இருந்தப்போ பார்த்திருக்கேன்!'' என்றார் முதலாளி.

''எனக்கு அவ என்னிக்கும் சின்னப் பெண்தான்!'' என்று சந்தானம் சிரித்துக்கொண்டே நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

''அப்பா இங்கே வரமாட்டார். நீங்க தான் அங்கே போகணும்... வாருங்கள் நான் அழைத்துக் கொண்டு போகிறேன்...''

அகிலாவின் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கியது. சந்தானம், தன் கம்பெனி விஷயமாக முதலாளியுடன் அவளுடைய தகப்பனுரைப் பார்க்கத்தான் வந்திருக்கிறுன் என்றுலும் அன்றைக்குக் காலையில் அவனைப் பற்றி நினைத்ததையெல்லாம் அறிந்துகொண்டுதான் வந்திருப்பதாக அவள் பிரமை கொண்டாள். சந்தானத்தின் முகம் என்றுமே அவளுக்குப் பிடித்த முகம். ஒரு கடுகடுப்பும் சிடுசிடுப்பும் இல்லாத வேறு முகத்தை அவள் பார்த்ததே கிடையாது. அந்த முகத்தில்தான் என்ன வசீகரம்! கண்களில் குறுகுறுப்பு! அவன் சிரிக்கையில் தாடையில் குழி விழுமே! அதைப் பார்க்கையில்தான் என்ன ஆனந்தம் அவளுக்கு! இருவருக்கிடையில் காலமும் தூரமும் விரிந்து கொண்டே போனுலும், அவனை என்னவோ அவளால் மறக்கவே முடியவில்லை. ஏன்?

''இப்போ என்ன எழுதிண்டிருக்கே, அகிலா...?''

உங்கள் குழந்தையை நீங்கள் கட்டிக்கொஞ்சும் போது...

குழந்தையின் பட்டான சருமத்திற்கீடான மென்மை உலகிலேயே வேறில்லையென்று நீங்கள் நினைக்கிறீர்கள் அல்லவா?

உண்மைதான்! அதனால்தான் உங்கள் குழந்தையின் சருமத்திற்கு பிராடஸாலின் இதமான பராமரிப்பு தேவை. பிராடஸால் மிக மென்மையான ஒரு கிருமி நாசினி. பினுகா பேபி பவுடரில் மட்டுமே உள்ள பிராடஸால் உங்கள் குழந்தையின் மிருதுவான சருமத்தை எரிச்சல் அடையாமல் பாதுகாக்கிறது.

ஆம்! பினுகா பேபி பவுடர்கூட உங்கள் குழந்தையை நேசிக்கிறது. பினுகா பேபி பவுடர் உபயோகியுங்கள் — அவன் மகிழ்வதைக் காணுங்கள்.

# “அம்மா! பினுகா”





ஒருவர்: என் பேத்தி விழுங்கின முழு ரூபாயை ஆப்பரேஷன் செய்து எடுக்கணும். டாக்டர் 'ஸிம்மன்' கிட்டப் போகச் சொல்றீங்களே! அவர் நம்பத் தகுந்த ஆள்தானா?
டாக்டர்: சந்தேகமே வேண்டாம். வெளியில் எடுத்த ரூபாயை நிச்சயம் உங்களிடம் தருவார். நான் உத்தரவாதம்.

---

''ஒண்ணுமில்லே...''

''நீ எழுதிப் பிரசுரமானதைக் கொடேன்...படித்துப் பார்க்கிறேன்.''

''அதெல்லாம் பெண்கள் படிக்க வேண்டியவை!'' என்று சிரித்தவளாய் நடந்தாள் அகிலா.

இவர்கள் இருவரும் பேசுவதற்கும் தமக்கும் எந்த விதமான சம்பந்தமு மில்லை என்று எண்ணியவரைப் போல் சந்தானத்தின் முதலாளி நடந்தார்.

ஹாலின் கோடியில் வலப்புறமாக இருந்த அறையை அடைந்ததும் அகிலா உள்ளே செல்ல, மற்ற இருவரும் வெளியே நின்றார்கள்.

ஆனால் அடுத்த நிமிஷமே அகிலா வெளியே வந்து அவர்களை அழைத்துக் கொண்டு சென்றாள்.

சாய்வு நாற்காலியில் படுத்திருந்த கோதண்டராமன் உட்கார்ந்து கொண் டார்.

''நீங்கள் சும்மா சாய்ஞ்சுக்குங்க!'' என்ற கம்பெனி முதலாளி, ''சௌக் கியமா... உடம்பை அலட்டிக்காம இருக்கணும்!'' என்றார்.

''என்னடா சந்தானம்.... ஊரிலே தான் இருக்கியா?''

''ஆமாம் சார்.... அன்னிக்கு உங் களைப் பார்க்கணும்னு வந்தேன். பார்க் கச் சௌகரியப்படவில்லை...''

அகிலா கிடைச்ச சந்தர்ப்பத்தை நழுவ விடவில்லை.

''ஆமாம்ப்பா..... சீமாச்சு கூடச் சொன்னான்... இந்த ராஜா வழி மறிச்சு நிறுத்தினானாம். ஆள் வித்தி யாசம் கூடத் தெரியல்லே உங்க ளுடைய செகரட்டரிக்கு...''

''உஸ்!'' என்று சந்தானம் ஆள் காட்டி விரலைத் தன் மூடிய வாயின் மேல் வைத்து அவளுக்குச் சைகை செய்தான். அதற்கு அகிலா அழகு காட்டினாள்.

இந்த நாடகத்தைக் கவனியாமல் வந்திருந்த முதலாளி ஒரு கடிதத்தைக் கோதண்டராமனிடம் நீட்டினார்.

அதை வாங்கிப் படித்த கோதண்ட ராமன், ''இப்படி ஒரு லெட்டர் எழுதி யிருக்கிற விஷயமே எனக்குத் தெரி யாதே? ராஜாதான் அப்புறம் சொல் லிக்கொள்ளலாம்னு எழுதியிருக்கிறான்'' என்றான்.

''ரகுபதியை நான் டிஸ்மிஸ் பண்ணிப் பத்துப் பன்னிரண்டு வருஷம் ஆறது. அப்போ நம்ப கம்பெனிக்குள்ளே நடந்த பூசலை நாம பைசல் பண்ணியாச்சு... இப்போ திடீர்னு இது மாதிரி லெட் டர் எழுதினா...'' முதலாளிக்கு மூச்சு வாங்கியது.

''நீங்கள் கவலைப்படாதீர்கள்...''

''அப்படியே இப்போ உசிர் கொடுத் தாலும் உங்கள் கம்பெனிதான் பாக்கி தரணும்....ஆனால் நான் அதை மறந் துட்டேன்....''

கோதண்டராமன், ''நான் தர ணும்னு இருந்தா தந்துவிடறேன்... ஆனா, நீங்க இதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். இந்த லெட்டர் எங் கிட்டயே இருக்கட்டும்... அகிலா! ரெண்டு பேருக்கும் காப்பி டிபன் கொண்டு வாயேன்!'' என்றார்.

முதலாளி மனச் சமாதானம் அடைந் தவரைப்போல் காப்பி டிபனுக்குக் காத் திருக்க, சந்தானம் அகிலாவின் முகத்தை மீண்டும் காண ஆர்வமும் துடிப்புமாய் ஏங்கிக் கொண்டிருந்தான்.

ஃ ஃ ஃ

ருத்ரஹோமம் முடிந்து எல்லாரும் சாப்பிட்டு ஆனதும் ராஜாங்கம், கோதண்டராமனை அவருடைய அறை யில் கொண்டு விட்டு விட்டு, ''கொஞ்ச நேரம் ரெஸ்டு எடுத்துக் கொள் ளுங்கள்'' என்று சொல்லி மின்சார விசிறியின் சுவிச்சைப் போட்டான்.

இலேசான காற்று அவர் மேல் பட, அவர் அந்தச் சுகத்தில், ''நீயும் போய் ஓய்வு எடுத்துக் கொள்... நரள் முழுதும் மாடு மாதிரி அலைந்திருக்கே!'' என்று கூறினார்.

''நான் வீடு வரைக்கும் போய்வருகிறேன். ஆறு மணிக்கு வந்தால் போதுமா?'' என்று கேட்டான் ராஜா.

''உம்... எல்லாம் போதும்....''— என்ற அவர், ''இந்த வெய்யிலிலே எப்படிப் போகப் போறே? டாக்ஸியிலே போ....'' என்றார். பிறகு தொடர்ந்து ''நீ அவ்வளவு தூரத்திலேயிருந்தா எனக்கு ரொம்பச் சிரமமாக இருக்குடா!'' என்றார்.

புன்முறுவலால் அவருக்கு விடை கொடுத்த அவன் வெளியே வந்தான்.

கோதண்டராமன் சொன்னபடி டாக்ஸியில் செல்ல அவனுக்குப் பைத்தியமா ? பதினெட்டுப் பைசா கொடுத்தால் அடையாறு. அங்கிருந்து ஒரு பதினாறு பைசா. முப்பத்திரண்டு பைசா போகப் பாக்கி இரண்டு ரூபா யாவது தேறுமே! வீட்டுக்குப் போனதும் கோதண்டராமன் ருத்ரஹோமச் செலவுக்கும் கோவில் அபிஷேகங்களுக்கும் என்று கொடுத்திருந்த ஐந்நூறு ரூபாய்க்குக் கணக்கெழுதியாக வேண்டும். கண்டிப்பாக ஐம்பது ரூபாயாவது அவனுக்குத் தேருதா?

ராஜா மெதுவாக நடந்து ஐந்தாம் நம்பர் பஸ்ஸுக்காகக் காத்திருந்தான். அவன் உள்ளத்தில் கோதண்டராமனைப் பற்றிய எண்ணங்கள் எழுந்தன. அவர் இன்னும் எத்தனை நாட்கள் பூத உடலைத் தாங்கிக் கொண்டு இருக்கப் போகிறாரோ? அதற்குள் அவன் தன் காரியத்தைச் செய்துமுடித்துவிட வேண்டும்! சரியான சந்தர்ப்பம் வாய்க்காமல் போனால், அவன் சந்தர்ப்பத்தைச் சிருஷ்டி செய்து கொண்டாக வேண்டும். தவறி விட்டால் அப்புறம் அவனுடைய கனவுகள் எல்லாம் குலைந்து விடும்! ஐந்தும் பத்துமாகப் பொய்க் கணக்கு எழுதி அவன் எவ்வளவுதான் சேர்க்க முடியும்?

**வீ**ட்டை அடைந்ததும் அவனுடைய தாயார் லட்சுமி அம்மாள் கதவைத் திறந்தாள். திறந்த அவள், ''என்னடா சீக்கிரமே வந்து விட்டாய் ?'' என்று கேட்டாள்.

உடனடியாகப் பதில் சொல்லாத அவன், கூடத்துக்கு அப்பாலிருந்த தன் அறைக்குச் சென்று காகிதமும் பேனாவுமாக உட்கார்ந்தான். கணக்கெழுதி, கையில் மிச்சமாகியிருக்கும் தொகை சரியாக இருக்கிறதா என்று எண்ணிப் பார்த்தான். கோதண்டராமனுக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டிய கணக்கின்பிரகாரம் பதினேழு ரூபாயும் சில்லறையும் மிஞ்சின.



'' என் பல் செட்டைக் காணோம்! வீடு முழுதும் தேடிப் பார்த்து விட்டேன். கிடைக்கவில்லை. எதற்கும் என் வயிற்றை எக்ஸ்ரே எடுத்துப் பார்த்து விடுகிறீர்களா ?''

---

அந்தப் பணத்தைத் தனியாக ஒரு பாக்கெட்டில் வைத்து விட்டு, பாக்கிப் பணத்தை எண்ணினான். அவனுடைய கணக்கு சரியாக வந்து விட்டது. நாற்பது ரூபாய்!

''அம்மா !''

''என்னடா ?''

''இதை எடுத்து வை அம்மா ! அந்தப் பெட்டியிலேயே வை....''

லட்சுமி அம்மாளின் கை நடுங்கத்தான் நடுங்கியது. ஆனால் அவளால் தன் பிள்ளையை எப்படி அடக்க முடியும்? வாரத்துக்குக் குறைந்தது மூன்று நாட்களிலாவது, 'இந்தா அம்மா' என்று இருபதும் முப்பதுமாக அவள் கையில் கொடுத்துப் பத்திரப்படுத்தச் சொல்லுகிறான். அதுவும் கடந்த சில வாரங்களாக அவன் கொடுத்த பணத்துக்குக் கணக்கில்லை. ஒரு ராத்திரி நூறு ரூபாய். இன்னொரு நாள் எழுபது.

நான்கு நோட்டுகள் அவனுடைய கைக்கு வந்ததும், என்றும் போல ஒரு நிமிஷம் அங்கேயே தயங்கி நின்று விட்டு, ''ராஜா!'' என்று குழைந்தாள்.

''என்ன அம்மா ?'' என்று அவன் நிமிர்ந்தான்.

''நீ வயசு வந்த பிள்ளை.... இந்த ஐப்பசிக்கு முப்பதாகப் போகிறது....''

''விஷயத்துக்கு வா, அம்மா!''

''எனக்குச் சொல்கிறதுக்கே பயமாயிருக்கு !''

''அப்போ பேசாமல் போ.... என் உசிரை வாங்காதே. வயசானு சோத்தைத் தின்னுட்டு மூலேயிலே முடங்க வேண்டியதுதானே ! நீ என்ன சொல்ல வர்றேன்னு எனக்குத் தெரியும்..... நீ போ.....''

''உன் அப்பாவும் என் மாதிரியே கவலேப்படறுர்டா....!''

''அவரைக் கோவில் வாசலிலே போய் உட்கார்ந்து கவலேப்படச் சொல்லு. கோதண்டராமன் பெரிய புள்ளிகளேக் கொள்ளே அடிக்கிறுர். கவர்ன்மெண்டை ஏமாத்தறுர். நான் அவரை ஏமாத்தறேன். இதைத்தான் நான் எத்தனேயோ தரம் உன்கிட்டே சொல்லியாச்சே....''

''இது தப்பு இல்லேயாடா ராஜா?''

''அம்மா.. இந்த உலகத்திலே தப்பையும் ரைட்டையும் பார்த்திண்டிருந்தா நீ என்னிக்கும் இப்படியேதான் இருப்பே.... நான் கெடைச்ச வரைக்கும் ஆதாயம்னு இருக்கேன். மனுஷனுக்கு ஒரு தடவை 'ஹார்ட் அட்டாக்' வந்தாச்சு.... இன்னமே தினம் தினம் கண்டம்தான்... கம்பெனியையே வேறு மூடப் போறுர்.''

'அப்போ உனக்கு வேலேபோயிடுமா?'

''கண்டிப்பா போகும்.... அங்கே அவர் போனப்புறம் யாருக்கு செக்ரடரியா இருக்க முடியும்?''

லட்சுமி அம்மாள் பெருமூச்செறிந்தாள்.

''வேலே போறதுக்கு முன்னுடி நீயே நின்னு விடேன். நீதான் பி.காம். படிச்சிருக்கியே.... வேறே வேலே கிடைக்காமயா போயிடும்....?''

''எல்லாம் எனக்குத் தெரியும் அம்மா நீ போ....''

''அவர் கண்டு பிடிச்சுட்டா என்னடா செய்வார் ?''

''கண்ணும்புக் காளவாயிலே போட்டு வேக வைப்பார்! நீ என்ன அம்மா, பைத்தியம் மாதிரி உளர்றே? எப்படிக் கண்டுபிடிக்க முடியும்...? இதோ பாரு, நான் அவருக்குக் கொடுக்கப் போற கணக்கு.... ஒவ்வொரு அயிட்டத்திலேயும் அதனதன் மதிப்புக்கு ஏத்தபடி இரண்டு மூனு அஞ்சுன்னு கூட்டி எழுதியிருக்கேன். இதுக்கெல்லாம் கடைக்காரன் ரசிதையா அவர் கேட்கப் போறுர்....?''

''நீ எழுதறது பொய்க் கணக்கு இல்லேயாடா ?''

''யார் இல்லேன்னு? பொய்க் கணக்குத்தான் எழுதியிருக்கேன்.... ஏன் இந்தக் கோதண்டராமன் என்னே வேலேக்கு வைச்சுண்டார் தெரியுமா? கம்பெனிக் கணக்கை ரெண்டு விதமா என்னுலே எழுத முடியும்னு தான்.... நான் இல்லேன்னு அவராலே இன்கம் டாக்ஸ்காரன் கேட்கிற கேள்விக்கு ஒரு பதில் சொல்ல முடியாது!''

''அவர் சர்க்காரை ஏமாத்தறுர் என்கிறதுக்காக நீ அவரை ஏமாத்தலாமா? உன்னேயும் நாளேக்கு ஒருத்தன் ஏமாத்துவானே ?''

''இதுதான் அம்மா, இன்னிக்கு இருக்கிற உலகம். ஒருத்தனே ஒருத்தன் ஏமாத்திண்டே போகிறதுதான் உலகம். இல்லாட்டா யாரும் பிழைக்க முடியாது. நீ என்னவோ காந்தி சொன்ன ராம ராஜ்யத்திலே இருக்கோம்னு நினேச்சுண்டு என்னென்னவோ சத்தியத்தையும் நியாயத்தையும் பேசறே. ஒருத்தரை ஒருத்தன் நம்பி வாழ்ந்த காலமெல்லாம் போயாச்சு!''

லட்சுமி அம்மாள் தான் பெற்றெடுத்த ரத்தினத்தின் துடிக்கும் உதடுகளேயும் சிவந்த முகத்தையும் பார்த்து நின்ருள். 'இவன் வாழ்க்கையில் திருந்துவானு ?' என்ற கேள்வி எழுந்து அவள் நெஞ்சை அறுத்தது.

''மூதன் முதலா ஒரு சௌகார் கிட்டே வேலேக்கு இருந்தேனே ஞாபகம் இருக்கா உனக்கு? அந்த ஆள் இருக்கானே யம பாதகன். ஏழை ஜனங்கள் வெள்ளிக் கொலுசையும், பித்தளேப் பாத்திரங்களேயும் எடுத்துண்டு வரும். நாற்பது ரூபாய் கொடுக்கலாம்னு இருந்தா வாய் கூசாம இருபது ரூபாய்தான் தருவேன் என்பான். பாவம் அரிசிக்கு இல்லாத தவிக்கிற ஜனங்கள் சரி என்பார்கள், ரூபாய்க்கு மாசத்துக்கு இரண்டணு வட்டின்னு அட்வான்ஸாகக் கறந்துடுவான்..... நான் அடமானச் சிட்டிலே எழுதறது எவ்வளவு தெரியுமா ? அரையணு வட்டி ! யார் அந்த டாகுமெண்டைப் பார்த்தாலும், சௌகார் தர்ம பரிபாலனம் பண்ருர்னுதான் நினேப்பார். இப்போ அவர் எதிலே அம்மா குறைஞ்சு போயிட்டார்..? பெண்களே ராஜஸ்தானிலே பெரிய பெரிய இடங்கள்லே கொடுத்திருக்கிருர். அது மாதிரி பிள்ளேக்கும் வாங்கியிருக்கார். பன்னிரண்டு வீடு இந்த மெட்ராஸிலே இருக்கு.....!''

'' அந்தப் பணமெல்லாம் நிக்காதுடா.....!''

''நீதான் கண்டே... பன்னண்டு வீடு எங்கேயிருந்து வந்தது ? ஆகாசத்திலேயிருந்து குதிச்சுதா? அவருடைய இந்தத் தலேமுறைக்கு நின்றிருக்கா இல்லேயா? நாளேக்கே எல்லாம் போனுலும் அவருக்கு என்ன...?'' என்ருன் ராஜா.

**(தொடரும்)**

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன் குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வர்ட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.




மனித சமுதாயம் இருக்கும்வரை பரிசுகளுக்கு என்றுமே தனியாக ஒரு மதிப்பு உண்டு. இலக்கியம், விஞ்ஞானம், சமாதானம், ஆகியவற்றில் சிறந்தவர்களுக்கு 'நோபல் பரிசு' வழங்கப்படுவது போல், திரைப் படங்களுக்கு 'ஆஸ்கார் பரிசு' வழங்கப்படுவதுபோல, ஒவ்வொரு நாட்டிலும் பிறந்த பொன் நாட்டைக் கண்ணும் கருத்துமாகக் காக்கும் ராணுவ வீரர்களுக்கும் பரிசுகள் வழங்கப்படுகின்றன. நமது நாட்டின் ராணுவத்தில் தலைசிறந்த வீரர்களுக்கு வழங்கப்படும் பரிசு பரம வீர சக்கரமாகும். அதுபோல் ஆங்கில ராணுவ வீரர்களுக்கு வழங்கப்படுவதுதான 'வி. சி.' என பெருமிதத்துடன் வழங்கப்பெறும் விக்டோரியா கிராஸ் பதக்கம்.

பிறநாட்டு ராணுவப் பதக்கங்களுக்கும் ''வி.சி.''க்கும் அநேக வேற்றுமைகள் உண்டு. உலகில் உள்ள மிகப் பழமையான ராணுவ விருதுகளில் விக்டோரியா கிராஸ் முதலிடம் வகிக்கிறது. வி. சி. ஏற்படுத்தப்பட்ட விதமே ஒரு சுவையான சிறுகதை எனலாம்.

**1858**ம் ஆண்டில் ரஷ்ய மன்னனை முதலாம் நிக்கோலாஸ் தனது புகழையும் சாம்ராஜ்யத்தையும் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்ற ஒரே நோக்கத்தினால் சின்னஞ் சிறிய துருக்கி நாட்டின் மீது படையெடுத்தான். ஆனால் எதிர்பாராத விதமாக மன்னன் நிக்கோலாஸ் அதிர்ச்சியுறும் வகையில் இங்கிலாந்தும் பிரான்சும் துருக்கி நாட்டை ஆதரித்தன. அதுமட்டுமன்றி ரஷ்யாவுக்கு எதிராக நேரடியாகப் போரில் பங்கு கொண்டன.

சுமார் மூன்று ஆண்டுகளுக்கு மேல் நடைபெற்ற க்ரிமியப் போர் முடிவடைந்ததும் சுமார் இருபதினாயிரம் இளம் ஆங்கில வீரர்கள் இறந்தனர் என்ற செய்தி மெள்ள மெள்ள ஆங்கில மக்களுக்குப் பரவியது. இப்பயங்கரச் செய்தியைக் கேள்வியுற்ற ஆங்கில மக்கள் கொதித்தெழுந்தனர்.

சினத்தால் கொதித்தெழுந்த பொது மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் அப்போது இங்கிலாந்து நாட்டை ஆண்ட விக்டோரியா மகாராணியின் மணாளர் ஆல்பர்ட் போர்முனையில், எதிரிகளின் முன்னிலையில் அஞ்சா நெஞ்சத்துடன் அருஞ் செயல் புரிந்த வீரர்களுக்கு ஒரு விசேஷ விருது கொடுப்பதாக அறிவித்தார். அதுமட்டுமின்றி இவ்விசேஷ விருதைப் பெறுபவர்களுக்கு ஆண்டுதோறும் பத்துப் பவுன் சன்மானமாக அளிக்கப்படும் என்றும் கூறினார்.

இவ்விசேஷ விருதை உருவாக்குவதற்காக அரசாங்கம் நாடெங்கிலுமுள்ள பல கலைஞர்களை அணுகி ஒரு 'மாதிரி' செய்து கொடுக்கும்படி வேண்டிக் கொண்டது. அரசாங்கத்துக்குச் சமர்ப்பிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான 'மாதிரி'களில் விக்டோரியா மகாராணி பல நாட்கள் ஆராய்ந்த பின்னர் ஒரு 'மாதிரி'யைத் தேர்ந்தெடுத்தார்.

இப்பதக்கத்தை உருவாக்கும் பேறு லண்டன் நகரில் உள்ள பிரபல ஹான்காக் நிறுவனத்துக்குக் கிடைத்தது. இந்நிறுவனம் முதன் முதலில் போர் முனையில் ரஷ்ய நாட்டுப் படை வீரர்களிடமிருந்து கைப்பற்றிய வெண்கலப் பீரங்கியிலிருந்து பதக்கத்தை உருவாக்கினார்கள்.

இவ்விசேஷ விருதுக்குப் பெயர் வைப்பது பற்றி விவாதம் எழுந்தது. இறுதியில் பல விவாதங்களுக்குப் பிறகு ஆல்பர்ட் மன்னர் கூறிய ஆலோசனைப்படி இங்கிலாந்தின் அரசியான விக்டோரியாவின் பெயரையே வைப்பதாக முடிவு செய்யப்பட்டது. இவ்விசேஷ வீரப் பதக்கம் 'விக்டோரியா கிராஸ்' என இன்றைக்கும் புகழுடன் விளங்குகிறது.—அ. இராமதுரை




## அவனுக்கு போர்ஹான்ஸ் கொண்டு பற்களைத் தக்கபடி பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க வேண்டிய காலம்

உங்கள் குழந்தை தூரத்து இடங்களைப் பற்றி அறிய ஆவலாயிருக்கும் போது உங்களை நாடுகிறான். உங்களிடமிருந்து அவன் கற்கும் முக்கியமான விஷயங்கள் பல. அவற்றில் ஒன்று போர்ஹான்ஸ் பற்பசையினால் பற்களைத் தக்கபடி பராமரித்தல். போர்ஹான்ஸ் ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும், தடுக்க உதவுகிறது.

பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் ஈறுகளைப் பாதுகாக்கும் விசேஷப் பொருள் கொண்டது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் நல்லது. எனவே இன்றும், என்றும் பற்கோளாறுகளைத் தடுப்பது எப்படியென்று அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். அவனை இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் உபயோகிக்கச் செய்யுங்கள். இப்பொழுதே அவனுக்கு ஆயுட்கால முழுதும் பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்றுக் கொடுங்கள்.



**போர்ஹான்ஸினால்**
**பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க இதுவே சிறந்த சமயம்**




இலவசம்! "பற்களையும், ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற விவரமான வண்ணப் புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது. தபால் செலவுக்கு 10 பைசா தபால் தலைகளை அனுப்பவும்: மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்-1

பெயர் ..............................................

முகவரி ..............................................

*வேண்டிய மொழியைக் கோடிட்டுக் காட்டுக: தமிழ், ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, வங்காளம், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.
உங்கள் குழந்தை படிக்க வேண்டிய முக்கியமான புத்தகங்களுள் இதுவும் ஒன்று

**போர்ஹான்ஸ்** பற்பசை—பல்வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பெற்றது

CMGM-189 TM



# ரயிலில்

டி.எஸ்.துக

அந்த ரயில் வண்டி புறப்படுவதற்கு இன்னும் சில நிமிஷங்களே பாக்கி யிருந்தன. இரண்டாவது மணி அடிக்க வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது. முதல் வகுப்புப் பெட்டியை நோக்கி ஒரு பெருங் குடும்பமே வந்தது. குடும்பத் தலைவர் முதியவராகத் தோன்றிய போதிலும் கட்டுக் குலையாத நெடிய சரீர முடையவராக இருந்தார். அவருடைய மனைவியைப் பார்க்கத்தான் விசித்திரமாக இருந்தது. கட்டையும் குட்டையுமான உடல். புஜங்களின் மேற்புறத்தில் சதை அடைத்துக் கிடந்தது. பளீரிடுகிற கறுப்பு. நரைத்த கேசம். இந்த வண்ணச் சூழலில் நெற்றியில் ஊதா நிறக் குங்குமம்! வண்டிக்கு நேரமாகிவிட்டதே என்ற பரபரப்பில் ஓட்டமான நடை. கிழ்வாரிசுகளின் கைகளில் பைகளும் கூடைகளும். அம்மாளின் இடுப்பில் ஓர் இட்டிலிப் பானை. வயோதிகரின் கையில் ஒரு சாக்குப் பை. இத்தியாதி கோலங்களுடன் முதல் வகுப்புப் பெட்டியில் காலடி வைக்கும்போது—

''பெரியவரே!...... வேறே பெட்டியைப் பார்த்து ஏறுங்கள். இது முதல் வகுப்புப் பெட்டி...''

பெட்ரோலில் தீப்பற்றிக் கொள்கிறமாதிரி பெரியவரின் முகத்தில் சினம் பற்றிக் கொண்டது.

''அது தெரிஞ்சுதான் ஏறுகிறேன்! நாங்களும் மொதல் வகுப்புலே போறவங்க தான்!.....''

முகத்தைப் பாராமலே பதில் சொல்லி விட்டாலும், பெட்டிக்குள் ஏறிய பின் சக பிரயாணியின் முகத்தைப் பாராமல் இருக்க முடியுமா?

பெரியவர் பார்த்தார். மற்றவர் சற்று நாணம்கொள்ளும்படி வெறித்துப் பார்த்தார்.

சற்றேறக் குறைய முப்பது வயது. களையான முகம். அதை மேலும் அழகுபடுத்துவதுபோல் மூக்குக் கண்ணாடி. பளிச்சென்று கௌரவமான உடை. பக்கத்தில் செய்தித் தாள்கள், பத்திரிகைகள், புத்தகங்கள்....

இளைஞர் முகத்தில் ஓர் அரும்புப் புன்னகை. முதலில் விரட்டியதற்காக மன்னிப்புக் கோர விரும்புகிற ஒரு பாவம்.

பெரியவருக்குச் சற்றுத் தெம்பு வந்தது. ''தம்பிக்கு எந்த ஊரோ?''

''இதே ஊர்தான்.''

''ரொம்ப தூரம் போறீங்களா?''

''இல்லே. ஏழு மணிக்கு இறங்கிவிடுவேன்.''

''அப்படின்னா நாங்க போற இடம்தான் நீங்க போறதும்''

இளைஞர் தலையை மட்டும் அசைத்தார்.

இதற்குள் அந்தப் பெருங் குடும்பத்தினர் எல்லாரும் பெட்டியில் ஏறிவிட்டிருந்தார்கள். பைகளும், கூடைகளும், இட்டிலிப் பானையும் சாக்குப் பையும், நாலு படுக்கைகள் கொண்ட அந்தப் பெட்டியின் பெரும் பகுதியையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டன. திருவிழாவில் கடை பரப்ப வந்த மாதிரி இருந்ததே தவிர, முதல் வகுப்புப் பிரயாணமாகத் தோன்றவில்லை.

பெரிசும் சிறிசுமாய் ஐந்து குழந்தைகள். பதினைந்து வயதில் ஒரு பெண். மற்றச் செடிகளோடு சேராத தனிக் கொடியாய், அமரிக்கையாய் இருந்தது. மற்ற நான்கும் வாலில்லாக் குரங்குகள். குரலில் ஓர் அசுரத் தனம். பேச்சில் பாமரத்தனம். அம்மாளின் குரல் வெளித் தோற்றத்தைப் போலவே ஆச்சரியப்படுத்தக் கூடியதாய், சண்டை போடும் பூனையின் குரலாக இருந்தது.

இரண்டு மேல் படுக்கைக்குமாக நான்கு தலைகள் பரஸ்பரம் முட்டிக் கொள்ளத் தொடங்கின. பெரியவர் ஓர் அதட்டல் போட்டுவிட்டு உட்கார்ந்தார். ''வண்டி ரைட் டயத்துக்குக் கிளம்பிட்டான் போல் இருக்கே?''

படித்துக் கொண்டிருந்த இளைஞர் சற்றே தலையைத் தூக்கினார். கேள்வி தன்னை நோக்கி விடுக்கப்பட்டதுதானா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புவதைப் போல. பின் 'ஆம்' என்று தலையை அசைத்தார்.

''தமிழ்ப் பேப்பர் ஒண்ணுமில்லையா?''

''இல்லையே....''

''நானுந்தான் முப்பத்தஞ்சு வருஷம் ரயில்லே உத்யோகம் பார்த்து, கைநிறையச் சம்பளம் வாங்கி, ரிடையராயிட்டேன்! கையெழுத்து மட்டும்தான் இங்கிலீசிலே போடுவேன்!...''

''ஓஹோ!''

''டிரெயின் எக்ஸாமினர்னு தம்பிக்குத் தெரியுமா?''

''சரியாகப் புரிபடவில்லையே...''

''ரயில்வேயில், மெகானிகல் டிபார்ட்மெண்ட். காரேஜுகள், வாகன்கள்—இதிலேயெல்லாம் பிட்டிங்ஸ் ஒழுங்கா இருக்கான்னு பாக்கறது. நீலச்சட்டை போட்டுக்கிட்டு லொட்டு லொட்டுன்னு சக்கரத்தைத் தட்டுறவனே அவங்களுக்கெல்லாம் சுபீரியர்!''

''அப்படியா?''

''நானும் முதல்லே அப்படித்தான் சேர்ந்தேன். அப்புறம் படிப்படியா புரொமோஷன் கிடைக்கிட்டே வந்தது!... தம்பி எவ்வளவு படிச்சிருக்கு?''

''நானு?...சும்மா, எம். ஏ. வரை படிந்தேன்.''

''எம். ஏ.யா? பெரிய படிப்பாச்சே அது! என் பெரிய பயலையும் படிக்கச் சொல்லி முட்டிக்கிட்டேன். இண்டர்மீடி யட்டுக்கு மேலே காலை வைக்க மாட்டே னுட்டான். ம்... அவனுக்குப் பொறி. ரெவின்யூ டிபார்ட்மெண்டிலே கிளார்க் காகத்தான் போய்ச் சேர்ந்தான். அவன் சேர்றதுக்கே எத்தனை வேலை பண்ண வேண்டி யிருந்தது!....''

''வேலை கிடைப்பதே இண்டாட்டமாகத் தானே இருக்கிறது!''

''அது மட்டும் இல்லே, தம்பி. நான் புதுசா ஒரு ரிகார்டையே உண்டாக்கிப்பிட் டேன்! உங்ககிட்டே சொல்றதிலே குத்த மில்லே. நாங்க பின் தங்கிய வகுப்புன்னு கிராம அதிகாரிகிட்டே யிருந்து ஒரு சர்ட்டிபி கேட் வாங்கிபிட்டேன்!....பயலுக்கு அடி வயத்துலே நெருப்புத்தான்...துணிச்சல்தான் முக்கியம்டான்னேன்...''

பெரியவர் சற்று நிறுத்திய நேரத்தில் ''தாத்தா'' என்று மெல்லிய அழைப்புக் கேட்டது. கொஞ்சமாய் அவர் திரும்பி முறைத்த முறைப்பில், அந்த இளம் பெண் ணின் சப்த நாடியும் ஒடுங்கி விட்டன! ஒரு நிமிஷம் மௌனம். பின் ''அப்பா'' என்ற அழைப்பு. அதைக் கேட்ட பின்புதான், ''என்ன கொளந்தே?'' என்று கேட்டார் அவர்.

''தண்ணி...கூஜாவை மேலே வச்சிருக் கான், கண்ணையன்...''

அவர் எழுந்து கூஜாவை எடுத்துக் கொடுத் தார். பத்து வயதுப் பையன் ஒருவன் கீழே படுத்து உறங்கிவிட்டிருந்தான். அம் மான் மூலையில் சாய்ந்து குறட்டை விட்டுக் கொண்டிருந்தாள். இரண்டு பையன்கள் வெளிப்புற நடைபாதைக்கும் பாத்ரூமுக்கு மாக ஓடிப் பிடித்து விளையாடிக் கொண் டிருந்தார்கள். இவையெல்லாம் பெரியவரின் கண்களில் படவில்லை. எதிரேயுள்ள இளை ஞரைப் போல் அவர் பேச்சை வேறு யார் தான் பொறுமையுடன் கேட்கப் போகி றார்கள்?

''தம்பிக்குப் புத்தகம் படிக்கிறதிலே ரொம்ப ஆசை போலிருக்கு!...''

இளைஞர் நிமிர்ந்து புன்னகைத்தார். ''படிப் பதற்கு ஒய்வே கிடைப்பதில்லை. இந்தப் பிர யாணத்தின்போதுதான் கொஞ்சம் படிக்க முடிகிறது...''

''அப்போ படியுங்க.''

சற்றைக்கெல்லாம் ஒரு பெரிய ஜங்ஷனில் வண்டி நின்றது. சிற்றுண்டிச்சாலை சிப்பந்தி வந்து விசாரித்தார். ''திங்கறதுக்கும் குடிக் கிறதுக்கும் ஏதாச்சும் கொண்டுவா'' என்றார் பெரியவர். இளைஞர் வெறும் காப்பி மட்டும் கேட்டார். அவர்கள் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தபோது டிக்கட் பரிசோதகர் வந்தார். பெரியவர் முந்திக்கொண்டார். ''எனக்கு ஃப்ரீ பாஸ், சார். ரிடையர்டு டி. எக்ஸ்ஸார். இதெல்லாம் நம்ப கொழந் தைகள்!''

இளைஞரிடமிருந்து டிக்கட்டை வாங்கிக் கையெழுத்துப் போட்ட பின் திருப்பிக் கொடுத்து விட்டுப் போய்விட்டார் அவர். பரிசோதகர் தலை மறைந்ததும் பெரியவர் சொன்னார்: 'பாஸ் ரூல்ஸ் படுமோசம், தம்பி. சொந்தக் குளந்தைகளுக்கு மட்டும் தான் பாஸ் உண்டாம். பொண் வயத்திலே பிறந்தது, பிள்ளை வயத்துலே பிறந்ததுக் கெல் லாம் கிடையாதாம்... அவங்க ளுக்கு மட்டும் டிக்கட்டா வாங்க முடியும்? உங்ககிட்டே சொன்னால் குத்தமில்லே. இந் தப் பொண்ணு இருக்கே, என் மகன் வயத்துப் பொண்ணு. டிக்கட்டா வாங்குவேன்? என் சொந்தப் பொண்ணுன்னே பாஸ் போட்டிருக்கேன்!''



''தப்பில்லையா?''

''ஹ...ஹ...ஹா'' என்று சிரித்தார், பெரியவர்.

''தம்பி, உலகத்திலே தப் பைக் கண்டு பயந்துக்கிட் டிருந்தா சுகமா யிருக்க முடி யாது நான் எத்தனை பேரைக் காக்காய்ப் பிடிச்சி மேலே வந் தேன், தெரியுமா?... என் புள்ளைங்களுக்கும் அதைத்தான் சொல்லி வச்சேன்.''

''என்ன இருந்தாலும் நியா யம், நேர்மை, நீதி இவை களாலேதான் நிம்மதியான வாழ்வு கிடைக்கும்...''

''அதையெல்லாம் பார்த் துக்கிட்டிருந்தா, 'மத்தவங்க நம்மைக் குதிரையோட்டுவாங்க

என் பெரிய புள்ளையைப் பத்தி சொல்லிக்கிட்டிருந்தேனே, அவன் இப்போ இன்ஸ்பெக்டர் ஆயிட்டான். என்னமோ இன்ஸ்பெக்டர்!... ஆமா, கலெக்டருக்கு மேலே சாய்கால்!... என்ன அதிகாரம்! என்ன அந்தஸ்து!...... சம்பளத்தை நம்பியா பொழைச்சிக்கிட்டிருக்கான்? ஆமா, தம்பி என்ன வேலெ பாக்குது? உங்களெப் பத்தி விசாரிக்காமே நான் பாட்டுக்கு பேசிக்கிட்டிருக்கேனே?....''

பதிலாகக் கிடைத்தவை வெறும் தலையாட்டலும் புன்னகையும்தான்.

பெரியவர் விடவில்லை. ''கல்யாணம் ஆயிடுச்சா?''

''ஓ.... இரண்டாவது குழந்தைக்கு ஆறு மாதம் ஆகிறது...''

ரயில் வண்டி ஒரு சிறிய ஸ்டேஷனைக் கடந்து கொண்டிருந்தது. பெயர்ப் பலகையை வண்டி தாண்டியதும் கைக்கடிகாரத்தைப் பார்த்தார், இளைஞர். பின், பத்திரிகைகளையும், புத்தகங்களையும் தோல் பைக்குள் வைத்தார்.

பெரியவரும், அவரது குடும்பத்தினரும் தங்கள் சாமான்களை இறக்கச் சித்தப்படுத்தினார்கள்.

வண்டி நின்றது. முதலில் பெரியவர் கீழே இறங்கினார். தொடர்ந்து கையில் ஒரு பெட்டியுடன் அந்த இளம் பெண்ணும், இறங்கினாள். ''அப்பாவைக் காணுமே?''

''அதோ... வர்ரானே...'' என்று கூறிய கிழவர், ''தம்பி, ஒரு நிமிஷம். என் பிள்ளை வரான். அறிமுகம் பண்ணிடறேன்'' என்றார்.

அருகே வந்த மருதமுத்து அப்பாவைக் கவனிக்கவில்லை; அவரருகே நின்றுகொண்டிருந்த தன் செல்வியையும் பார்க்கவில்லை. போர்ட்டரைத் தொடர்ந்து இறங்கிக்கொண்டிருந்த, அப்பாவின் சக பிரயாணியாயிருந்த இளைஞரைக் கண்டதும், தூக்கத்திலிருந்து விழிப்புற்றாற்போல், கணீரென்று ஒரு 'குட்மார்னிங்' போட்டான். பின், கையைக் கட்டி வாயைப் பொத்திக் கொள்ளாத குறையாகச் சற்று ஒதுங்கி நின்று தன் கீழ்ப்படிதலைத் தெரிவித்துக் கொண்டான். வெகு அடக்கத்தோடு, அவர் கையிலிருந்த தோல் பையை வாங்கிக் கொள்ள முயன்றான்.

''நோ, நோ. உன் அப்பாவைக் கவனி, முதலில்'' என்று கூறிவிட்டுச் சரசரவென்று போய் விட்டார், அவர்.

பொறிகலங்கி நின்ற பெரியவர் கேட்டார்: ''யாரடா, அது?''

''எங்க கலெக்டர்!...,''

அவர் மண்டைக்குள் ஒரு கோள் வெடித்தது. ''என்ன!... என்னது?... ஐயையோ! நான் அவரைப் பார்க்கணுமே! கட்டாயம் பார்க்கணுமே!... நான் சொன்னதெல்லாம் பொய்யின்னு சொல்லணுமே...''

கூட்டத்தில் புகுந்து மாடிப் படியை நோக்கி ஓடினார் கிழவர். பழைய உண்மையைப் புதிய பொய்யால் பொய்யாக்க முயன்ற அசட்டு அப்பாவைப் பார்த்து அசந்து நின்றான் மருதமுத்து.

# பஞ்சாமிர்தம்

குளிக்கவும் துணி வெளுக்கவும் உபயோகமாகும் சோப்புக்களின் விலை குறைகிறது! —செய்தி

உஸ்...! இதை உரக்கச் சொல்லாதீர்கள். குழாயடியில் சோப்பைக் கரைக்கும் பயல் காதில் விழப் போகிறது!

ஃ ஃ ஃ

கால் பந்தாட்டப் பிரியர் ஒருவர், லண்டனில் தமக்குப் பிறந்த குழந்தைக்குப் பதினொரு ஆட்டக்காரர்களின் பெயரையும் ஒன்று சேர்த்து வைத்திருக்கிறார்! — செய்தி

நமது குழந்தையுடன் விளையாடும் போது மட்டும் அவர் கால் பந்தாட்ட நினைப்பில் குழந்தையை உதைக்காமல் இருக்கவேண்டும்.

ஃ ஃ ஃ

சூயஸ் வழியாக இந்தியாவுக்குச் சோளம் ஏற்றி வந்த ஒரு கப்பலில் தீ விபத்து. எனினும் தானியம் சேதமடையவில்லை. —கெய்ரோ செய்தி

இந்தியாவின் இப்போதைய அவசர உணவுத் தேவைக்குச் சுட்ட சோளமாக வந்தால்கூட நல்லதுதான் !

ஃ ஃ ஃ

கேரள நிதிமந்திரி சென்ற காரை நிறுத்தி அதன் டாப் மீது கேரோ செய்த மாணவர்கள் ஏறிக் கொண்டனர். — செய்தி

கேரோ தொல்லை, நாட்டில் தலைக்கு மேல் போய்விட்டது என்பதை இனியும் மறுக்க முடியாது.

ஃ ஃ ஃ

சாலைகள் சந்திக்கும் இடங்களில் வைக்கப்படும் பீப்பாய்கள் மீது விளம்பரங்களை ஒட்ட வேண்டாம் என்று சென்னை போலீஸ் உயர் அதிகாரி விளம்பரம் ஒட்டுபவர்களைக் கேட்டுக் கொண்டுள்ளார். - செய்தி

இந்த விஷயத்தையும் பிரசுரித்துப் பீப்பாய்கள் மீது ஒட்டிவிடாமலிருக்க வேண்டும்!

ஃ ஃ ஃ

துருக்கியில் ஒரு கால் பந்தாட்டத்தில் ஏற்பட்ட ரகளையில் 39 பேர் பலியாயினர். 600 பேர் காயமடைந்தனர்! — செய்தி

''அது கிடக்கட்டும்! ஆட்டம் முடிவு என்னாயிற்று?'' என்று கேட்கிறார் ஒரு விளையாட்டுப் பிரியர்.

# ஷேக் ஸாதியின் குட்டிக் கதைகள்

தொகுத்தவர்: கு. அழகிரிசாமி

[பாரசீக நாட்டில் ஷிராஸ் என்ற ஊரில் கி. பி. 1184-ல் பிறந்தவர் ஷேக் ஸாதி என்ற ஞானி. 108 ஆண்டுகள் வாழ்ந்த இவர் பல நாடுகளைச் சுற்றிப் பார்த்தவர். இந்தியாவுக்கும் வந்திருக்கிறார். இவர் எழுதிய 'போஸ்தான்' (பழத் தோட்டம்). 'குலிஸ்தான்' (ரோஜாத் தோட்டம்) என்ற இரண்டு நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவை இந்தக் குட்டிக் கதைகள். குலிஸ்தான் நூலை 1851-ல் ஜெர்மானிய மொழியில் மொழி பெயர்த்த அலாய்ஸ் ஸ்ப்ரெங்கர் என்ற ஜெர்மானிய அறிஞருக்குப் பாரசீக மன்னர் ஷா அம்பாரி வைத்த ஒரு யானையைப் பரிசாக அனுப்பினார் என்பது குறிப்பிடத் தக்கது.]

## மதியூகி மந்திரி

ஓர் அரசனிடம் மதி நுட்பமும் விவேகமும் நிறைந்த ஒரு மந்திரி இருந்தார். ஆனால் அந்த மந்திரியைப் பற்றி ஒருவன் பின் கண்டவாறு அரசனிடம் வந்து புகார் சொன்னான் :

''மந்திரி அந்தரங்கத்தில் தங்களுக்கு விரோதியாக இருக்கிறார். எப்படியென்றால்



இந்த ராஜ்யத்தில் உள்ள அனைவருக்கும் அவர் தங்க நாணயங்களைக் கடனாகக் கொடுத்து, 'அரசர் இறக்கும்போது இந்தக் கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்' என்று உத்தரவு போட்டிருக்கிறார்.''

இதைக் கேட்ட அரசனுக்கு மந்திரி மீது மிகுந்த கோபம் வந்து விட்டது. உடனே மந்திரியைப் பார்த்து, ''நீர் என் முன்னிலையில் நண்பரைப் போல் இருக்கிறீர். அந்தரங்கத்தில் என் விரோதியாக இருக்கிறீர். ஏன்?'' என்று கேட்டான்.

மதியூகியான மந்திரி தரையை முத்தமிட்டு விட்டுச் சொன்னார் : ''அரசே ! சகல ஜனங்களும் தங்கள் நலனை விரும்ப வேண்டும் என்பது என் ஆசை. தாங்கள் காலமாகும் போது என்னிடம் ,கடனைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமே என்பதற்காகத் தாங்கள் நெடுங்காலம் வாழ வேண்டும் என்று அவர்கள் பிரார்த்தனை செய்வார்கள் அல்லவா ?''

மந்திரி கூறியதைக் கேட்டு அரசன் பெரிதும் மனம் மகிழ்ந்தான். அவருக்கு மேற்கொண்டு பெரிய அந்தஸ்தையும் கௌரவத்தையும் கொடுத்து, அவரைப் பற்றிப் புகார் செய்தவனைக் கடுமையாகத் தண்டித்தான்.

இருவரிடையில் சண்டை என்ற தீயை மூட்டிவிட்டு, அதில் தன்னையே எரித்துக் கொள்வது என்பது புத்தியுடையவன் செய்யக் கூடிய காரியமல்ல. ★

## மூடர்களுக்கு மௌனமே சிறந்தது

எகிப்தில் ஒரு பிச்சைக்கார சந்நியாசி இருந்தான். அவன் எப்போதுமே வாய் திறந்து பேச மாட்டான். அவனைத் தேடி நாலா பக்கங்களிலிருந்தும் அறிவாளிகள் வந்து கூடினார்கள் — விளக்கை விட்டில் பூச்சிகள் மொய்ப்பதுபோல.

ஒரு நாள் இரவு அந்தச் சந்நியாசி, ''இப்படி மௌனமாகவே இருந்தால் நான்



ஒரு படிப்பாளி என்பதை ஜனங்கள் எப்படி அறிவார்கள்?'' என்று யோசித்தான். உடனே பேச ஆரம்பித்து விட்டான். அவன் வாய் திறந்து பேசிய பிறகுதான், எகிப்தி லேயே அவன்தான் மிகப் பெரிய மூடன் என்பதை அவனுடைய நண்பர்களும் கண்டு கொண்டார்கள்; விரோதிகளும் கண்டு கொண்டார்கள். அதற்குமுன் அவனைத் தொடர்ந்து சீடர்களைப் போல் போய்க் கொண்டிருந்தவர்கள் இப்போது அவனை விட்டு விலகி விட்டார்கள். பெருமையெல்லாம் போய், சந்நியாசி அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான். போகும் வழியில் ஒரு மருதி தென்பட்டது. அதில் அவன் பின்வருமாறு எழுதி வைத்தான்:

''என் முகத்தை நான் கண்ணுடியில் பார்த்திருந்தால், புத்தியில்லாமல் என் முகத் திரையை நீக்கியிருக்க மாட்டேன். கோர உருவம் படைத்திருந்தும் என்னை அழகன் என்று காட்டிக்கொள்ள ஆசைப்பட்டேன்!''

குறைவாகப் பேசுகிறவனுக்குப் புகழ் அதிகம். மௌனமே கௌரவமானது; குறைகளை மறைக்கக் கூடியது.

மிருகங்கள் மௌனமாக இருக்கின்றன. மனிதர்களுக்குப் பேசும் சக்தி இருக்கிறது. ஆனால் பயனற்ற பேச்சுப் பேசுகிறவர்கள் மிருகங்களை விட எவ்வளவோ இழிவானவர்கள். ★

## கொலை செய்யப் போனவன்

யேமன் நாட்டு மன்னன் ஒருவன், மிகவும் தாராள குணமும் அன்புள்ளமும் படைத்தவனாக இருந்தான். அப்படி இருந்தும் அவனிடம் யாராவது வந்து, ஹாதிம் என்ற ஓர் அரபுத் தலைவனைப் பற்றிப் பெருமையாகச் சொன்னால் அவனுக்குப் படுகோபம் வந்துவிடும். ''அந்த வெறும் பயலைப் பற்றி எவ்வளவு காலம்தான் நீங்கள் பேசிக்கொண்டிருக்கப் போகிறீர்கள்? அவனுக்குச் சொந்தமாக ஒரு ராஜ்யம் உண்டா? அதிகாரம் உண்டா? செல்வம்தான் உண்டா?'' என்றெல்லாம் கேட்பான் யேமன் மன்னன்.

ஒரு சமயம் அவன் தன் அரண்மனையில் ஒரு விருந்து கொடுத்தான். அதற்கு ஏராளமானவர்களை அழைத்திருந்தான். விருந்துக்கு வந்திருந்தவர்களில் ஒருவன் ஹாதிமைப் பற்றிப் பேசத் தொடங்கினான். மற்றொருவன் ஹாதிமைப் புகழ்ந்தான். இதைக் கேட்டதும் யேமன் மன்னன் மிகுந்த பொறாமை கொண்டு ஒரு தூதனை அழைத்தான். ''நீ போய் அந்த அரபுத் தலைவனைக் கொன்றுவிட்டு வா. அவன் உயிரோடு இருக்கும்வரையில் என் புகழ் பரவாது'' என்று சொல்லி அவனை அனுப்பினான் அரசன்.

தூதனும் அவ்விதமே ஹாதிமைக் கொல்வதற்குப் புறப்பட்டுப் போனான்.



வெகு தூரம் போனபிறகு சாலையில் ஒரு வாலிபனைச் சந்தித்தான். அவன் தூதுவனிடம் அன்பாகப் பேசி, அன்றிரவு தன் வீட்டில் தங்கவேண்டும் என்று சொல்லி அழைத்துச் சென்றான். வீட்டில் அவன் செய்த உபசாரங்களைக் கண்டு தூதன் தன்னை மறந்து விட்டான்.

விடிந்ததும் வாலிபன் அவனுடைய கையை முத்தமிட்டு, ''இன்னும் சில நாட்கள் என்னோடு தங்கியிருக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டான்.

''இங்கே என்னால் தங்க இயலாது. ஓர் அவசர வேலையாக நான் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றான் தூதன்.

''அந்த வேலை இன்னது என்று தாங்கள் சொன்னால் என்னால் ஆன உதவியைச் செய்கிறேன்'' என்றான் வாலிபன்.

''உதார குணம் படைத்தவனே! நான் சொல்வதைக் கேள். இந்த நாட்டில் உயர்ந்த உள்ளமும் நற்குணங்களும் உடைய ஹாதிம் என்பவரைப் பற்றி நீ அறிந்திருப்பாய். அவருடைய தலையைக் கொண்டு வர வேண்டுமென்று கட்டளை விட்டு யேமன் மன்னர் என்னை அனுப்பிவைத்திருக்கிறார். இருவருக்குமிடையில் என்ன விரோதம் என்பது எனக்குத் தெரியாது. ஹாதிம் இருக்கும் இடத்துக்கு எந்த வழியாகப் போக வேண்டும் என்று நீ தெரிவித்தால் நன்றி உடையவனாக இருப்பேன். உன் அன்பைப் பார்க்கும்போது நீ பாதையைக் காட்டுவாய் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டாகிறது.''

தூதன் இவ்வாறு சொன்னதைக் கேட்டு வாலிபன் சிரித்தான். ''நான்தான் ஹாதிம்! இதோ இருக்கிறது என் தலை! வெட்டி எடுத்துக் கொண்டு போங்கள். உங்களுக்கு என்னால் ஒரு கேடும் வராது. உங்கள் காரியத்துக்கும் இடைஞ்சல் ஏற்படாது'' என்று சொன்னான் வாலிபன்.

தூதன் உடனே வாளைத் தூர எறிந்து விட்டுக் கீழே சாஷ்டாங்கமாக விழுந்து ஹாதிமின் பாதங்களை முத்தமிட்டான். ''உங்கள் உடம்பில் உள்ள ஒரு ரோமத்துக்குக் கேடு விளைவித்தாலும் நான் மனிதன் ஆகமாட்டேன்'' என்று சொல்லிவிட்டு, எழுந்து அவனைக் கட்டித் தழுவினான். பிறகு யேமன் நாட்டுக்குத் திரும்பி விட்டான்.

தூதன் வருவதைப் பார்த்த அரசன், ''என்ன சேதி? எங்கே அவன் தலை? ஏன் கொண்டு வரவில்லை? ஒருவேளை அவன் உன்னைத் தாக்கிவிட்டானா? அவனை எதிர்த்துப் போராட உனக்குப் பலமில்லாமல் போய்விட்டதா?'' என்று கேட்டான்.

தூதன் தரையை முத்தமிட்டுவிட்டுச் சொன்னான்: ''நீதியும் விவேகமும் கொண்ட அரசே! நான் ஹாதிமைப் பார்த்தேன். அவர் அன்பிலும், அறிவிலும் சிறந்தவராகவும், என்னைவிடத் தைரிய



# ஃபாஸ்ஃபோமின்

# சக்தியை அதிகரிக்கிறது.

# பசியைத் தூண்டுகிறது.



# வலிவைப் பெருக்குகிறது.



# நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால்—**
**குடும்பத்தில் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்**




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும், பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய, பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட மார்க்காகும். காரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS — Shilpi SC 50 A /67 Tam




# ஓவல்டின்

## ஒப்பற்ற 'ஒலிம்பிக்' பானம்

**'ஒலிம்பிக்' தென்பை உங்களுக்குத் தருவதற்கென சக்தி செறிந்து வருகிறது.**

மற்றெந்த உணவுபானத்தையும் விட அதிக மால்ட் அடங்கப்பெற்று, சக்தி செறியூட்டப்பட்டது ஒவல்டின். மால்ட் என்பது தென்பு தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். அதிக மால்ட், பால், வைட்டமின்கள், புரதங்கள், கார்போஹைட்ரேட்டுகள், யாவும் அடங்கிய ஒவல்டின், ஆட்ட வீரர்களுக்குக் கிடைக்கும் அதே 'ஒலிம்பிக்' தென்பை உங்கள் குடும்பத்திற்கும் அளிக்கும்.

அருந்துங்கள் ஒவல்டின்: உடல்நலத்திற்கு ஒவல்டின், வலிமைக்கு ஒவல்டின், தென்புக்கு ஒவல்டின்.

*சக்தி செறிவிக்கப்பட்ட ஒவல்டின், 1932 முதல் நடத்தப்பட்டுவரும் 7 ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக விளங்கிவருகிறது.

# ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

ஒவல்டினைப் பாரதத்தில ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள, ஏ. வாண்டர் லிமிடெட்டின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.

சாலியாகவும் இருப்பதைக் கண்டேன். அவருடைய உபசாரங்களின் சுமையைத் தாங்க மாட்டாமல் என் முதுகு வளைந்து விட்டது. அன்பென்ற வாளால் அவர் என்னைக் கொன்று விட்டார்.'' நடந்த சமாசாரத்தை யெல்லாம் தூதன் விவரித்துச் சொன்னான். அதைக் கேட்ட மன்னன் அரபுத் தலைவனுடைய குடும்பத்தை வானளாவப் புகழ்ந்துவிட்டு, தூதனுக்குத் தங்கத்தைப் பரிசாக வழங்கினான். ★

## கொடியும் திரையும்

பாக்தாத் நகரத்தில் ஒரு கொடிக்கும் ஒரு திரைக்குமிடையே வாக்குவாதம் தொடங்கி விட்டது. கொடி அப்பொழுது தான் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்திருந்தது. அதனால் ஒரேயடியாகப் புழுதி படிந்திருந்தது. கொடி மிகவும் கோபத்துடன் திட்டிக் கொண்டு திரையைப் பார்த்துப் பின்வருமாறு கூறியது: ''நீயும் நானும் ஒரே சுல்தானிடம்தான் வேலை பார்க்கிறோம். ஆனால் எனக்கு ஓய்வு ஒழிச்சல் இல்லாத வேலை. கோழி கூப்பிடும் நேரத்திலிருந்து இராப்பாடிகள் கூவும் நேரம் வரையிலும் நான் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது. உனக்கோ முற்றுகை, யுத்தத்தின் கஷ்டங்கள்



சூறாவளி வாரியடிக்கும் மணல், காற்று, வெய்யில், இப்படி எந்த ஒரு கஷ்டமும் கிடையாது. நான் சதா காலமும் சேனையோடு நடந்து சாக வேண்டி யிருக்கிறது. நீ மாத்திரம் என்ன உசத்தி? நிலாவைப் போன்று வெள்ளை வெளேர் என்று இருக்கும் மெய்யன்பர்கள் உன்னைப் பொன்னே போல் போற்றிப் பேணுகிறார்கள். மல்லிகை மணம் கமழும் கன்னிப் பெண்கள் உன்னை அணைத்து வருடிக் கொண்டே யிருக்கிறார்கள். என்னையோ பட்டாளத்தில் புதிதாகச் சேர்ந்த முரட்டுப் பயல்கள்தான் சுருட்டி வைக்கிறார்கள்! அதுவும் பல சமயங்களில் என்னைத் தலைகீழாகவே சுருட்டி வைத்து விடுகிறார்கள்''.

கொடி பேசி முடித்தபின் திரை பேசத் தொடங்கியது: ''ஹூம்! நான் கேவலம் வாசல் நடையில் தலை வைத்துக் கொண்டிருக்கிறேன். நீ அப்படியா? பொற் கவசம் பூண்ட சூரியனையும் மதிக்காமல், அதை எதிர்த்துத் தலை நிமிர்ந்து பறக்கிறாய். யார் யார் தலையை நிமிர்த்துக் கொண்டு கர்வத்தோடு திரிகிறார்களோ, அவர்கள் வெகு சீக்கிரத்திலேயே கழுத்தளவு ஆழமுள்ள புழுதியில் விழுந்துவிட நேரும்.''

## காதலர் கண்கள்

ஓர் அரேபிய மன்னனுக்கு லைலா-மஜ்னூன் கதையைச் சொன்னார்கள். கடைசியில் மஜ்னூனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்றும் சொன்னார்கள். இதைக் கேட்ட மன்னன், ''நன்றாகப் படித்தவனும், சொல்லாற்றல் உடையவனுமான மஜ்னூன் ஏன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் பாலைவனத்தில் அலைந்து திரிந்தான்?'' என்று கேட்டான். பிறகு மஜ்னூனைத் தன்னிடம் அழைத்து வரும்படியும் கட்டளையிட்டான்.

மஜ்னூன் வந்ததும் அவனைப் பார்த்து, ''மனிதனிடத்தில் நீ என்ன பொல்லாத குறையைக் கண்டுவிட்டாய்? மனித வர்க்கத்தையே உதறிவிட்டுப் போய் மிருகங்கள் மாதிரி நடந்து கொள்ளத் தொடங்கினாயே, ஏன்?'' என்று கேட்டான் அரசன்.

''என் ஆசையைத் தடுக்க முயன்ற என் நண்பர்கள், அவளுடைய முகத்தைப் பார்த்திருந்தால் விஷயம் புரிந்திருக்கும்'' என்றான் மஜ்னூன்.

அரசனும் லைலாவின் அழகைப் பார்க்க விரும்பினான். மஜ்னூனை இந்த விதமாக வதைத்த அந்த அழகைக் காண வேண்டுமென்ற ஆவலினால் அவளைத் தேடிக் கண்டு பிடித்து ராஜ சபைக்குக் கொண்டு வர வேண்டும் என்று உத்தரவு பிறப்பித்தான். பல இடங்களிலும் தேடி லைலாவைக் கண்டு பிடித்து அரசனிடம் அழைத்து வந்தார்கள்.

அரண்மனை முற்றத்தில் நிறுத்தி அவளைச் சிறிது நேரம் கூர்ந்து பார்த்தான் அரசன். அவனுக்கு ஒரே கேலிக் கூத்தாக இருந்தது! அவனுடைய அந்தப்புரத்தில் உள்ள அடிமைப் பெண்கள் கூட லைலாவை விட எவ்வளவோ அழகும் கவர்ச்சியும் கொண்டவர்கள் என்று அரசனுக்குத் தோன்றியது. இதை மஜ்னூன் குறிப்பால் அறிந்து கொண்டு பின்வருமாறு சொன்னான்:



''தாங்கள் மஜ்னூனுடைய கண்களைக் கொண்டு லைலாவைப் பார்த்தால்தான் அவளுடைய தோற்றத்தில் உள்ள மகா அற்புதம் என்னவென்பது தங்களுக்குத் தெரியும்.'' ★

## இரண்டுக்கும் காரணம்

நீதி நெறி வழுவாமல் நடக்கும் ஒரு நல்ல மனிதன் ஒரு நாள் ஒரு கனவு கண்டான். அந்தக் கனவில் ஒரு கல்தான் சுவர்க்கத்திலும் ஒரு சாமியார் நரகத்திலும் இருப்பதைப் பார்த்தான். ''சாமியாருக்கு நரகமும், சாமியாரல்லாதவருக்குச் சுவர்க்கமும் கிடைத்த காரணம் என்ன?'' என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். கனவிலேயே அவனுக்குப் பின்வருமாறு பதில் கிடைத்தது:

''இந்தக் கல்தான் ஏன் சுவர்க்கத்தில் இருக்கிறார் என்றால், இவர் நீதி நெறி வழுவாமல் நடப்பவர்களை நேசித்தார். சாமியார் ஏன் நரகத்தில் கிடக்கிறாரென்றால், அவர் கல்தான்களின் தயவுக்காகத் தொங்கிக்கொண்டிருந்தார்.'' ★

## சாப்பாட்டு விதி

ஆர்தேஷிர் பாபேகான் என்ற அரசன் ஒருநாள் ஓர் அரேபிய வைத்தியரிடம், ''ஒவ்வொரு நாளும் எவ்வளவு சாப்பிட வேண்டும்?'' என்று கேட்டான்.

''நூறு டைரம் எடையுள்ள உணவைச் சாப்பிட்டால் போதும்'' என்றார் வைத்தியர்.

''நூறு டைரம் உணவு சாப்பிட்டால் எனக்கு எவ்வளவு சக்தி கிடைக்கும்?'' என்று அரசன் கேட்டான்.

''அந்த அளவு சாப்பிட்டால் சாப்பாடு உங்களைத் தாங்கிச் சுமக்கும்; அதற்கு மேல் சாப்பிட்டால் சாப்பாட்டை நீங்கள் சுமப்பீர்கள்'' என்றார் வைத்தியர். ★

## கொடுமையின் ஆரம்பம்

ஒருசமயம் நீதிமானாகிய நௌஷேர்வான் மன்னன் தன் பரிவாரங்களுடன் வேட்டைக்குப் போயிருந்தான். காட்டில் மாமிசத்தை வதக்கிச் சமையல் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது கைவசம் உப்பு இல்லாததால் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்துக்குப் போய் யாரிடமாவது உப்பு வாங்கி வரும்படி ஒரு பையனை அனுப்பினான் அரசன். அப்பொழுது, ''நீ வாங்கும் உப்புக்கு விலை கொடுத்துவிடு. இல்லையென்றால், இலவசமாக உப்பு வாங்குவது என்பது வழக்கமாகி விடும். அதன்விளைவாகக் கிராமமே நாசமாகிவிடும்'' என்று சொன்னான் நௌஷேர்வான்.

''கேவலம் உப்புத்தானே? இப் பொருளை இலவசமாக வாங்குவதால் கிராமத்துக்கு என்ன கெடுதல் நேர்ந்துவிடும்?'' என்று பக்கத்தில் இருந்தவர்கள் கேட்டார்கள்.

அதற்கு நௌஷேர்வான் சொன்னான்: ''உலகத்தில் கொடுமை என்பது முதலில் மிகவும் சிறியதாகத்தான் ஆரம்பமாயிற்று. அப்புறம் பரம்பரை பரம்பரையாக வந்தவர்கள் இன்றுள்ள பிரும்மாண்டமான அளவுக்கு அதைப் பெரிதாக்கி விட்டார்கள். அரசன் தன் குடிமக்களில் ஒருவனுடைய தோட்டத்தில் ஓர் ஆப்பிளைப் பறித்துத் தின்றால், அவனுடைய பணியாட்கள் அவனுக்காக அந்த ஆப்பிள் மரத்தையே வேரோடு சாய்ப்பார்கள். ஐந்துமுட்டைகளைக் கொண்டு வருவதற்கு அனுமதித்தால், படைவீரர்கள் ஆயிரம் கோழிகளைக் கொன்று சட்டியில் வைப்பார்கள்.'' ★

---




கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத் தலைநகரில் கர்நாடக சங்கீதமணத்தைப் பரப்பிவந்த மூவரில் திரு ஓ. வி. சுப்பிரமணியம் முதல் ஸ்தானம் வகிக்கிறார். மற்ற இருவர் திரு எஸ். கோபால கிருஷ்ணனும் ஆலத்தூர் வெங்கடேசனும்.

அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் டைகர் வரதாச்சாரியாரிடமும் திரு சபேசய்யரிடமும் நேர்முகமாகப் பாடம் கற்று, சென்னையிலேயே பல கச்சேரிகள் செய்து பின் தில்லி வந்து சிக்ஷை சொல்லி வைத்து, பல சிறந்த பாடக பாடகியரைத் தயாரித்த பெருமை 'ஓ.வி.'க்கு உண்டு.

புதுதில்லி தியாகப்பிரும்ம சபையின் ஆதரவில் ஸ்ரீ லால்குடி ஜயராமனும், திரு டி.கே. மூர்த்தியும் பக்க வாத்தியங்களிசைக்க திரு ஓ. வி. ஒரு கச்சேரி செய்தார். சம்பிரதாய சுத்தமாயும், தாளக் கட்டுடனும், கொடுத்து வாங்கும் பங்கீட்டுடனும் அமைந்தது அக் கச்சேரி. சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போல் லால்குடியின் சவால்-பதில், போராட்டம் தோத்தியா யிருந்தது.

எல்லாரும் செய்யாததைச் செய்கிறேன் என்று ஆபியை அவ்வளவு நாழி அரைத்துத் தள்ளியிருக்க வேண்டாம். இப்படி அசைந்தால் சுத்த சாவேரி, அப்படித் திரும்பினால் தேவகாந்தாரி களைதட்டும் இத்தகைய ராகங்களை கோடி காட்டி விடுவதுதானே நல்லது!

டி. கே. மூர்த்தி தனி ஆவர்த்தம் வாசித்தார். போதாதா?

இத்தருணத்தில் சபையினர் ஒரு மலரை வெளியிட்டார்கள். இத்தகைய மலர்கள் சாதாரணமாய் நல்ல விசிறியாய் உதவும். அப்படி இல்லாமல் நல்ல கட்டுரைகள் அடங்கிய மலராகவே அமைந்திருந்தது. — சுப்புடு



1964-ல் இந்தியப் பயணம் செய்த போப் ஆண்டவர் பற்றிக் கூறும் வாசகங்கள் அறிக்கை நமக்குப் புல்லரிப்பை உண்டாக்கும். அவர் சொல்கிறார்:

''கரைகாணாத ஜன சமுத்திரத்தைக் கண்டேன். பிரும்மாண்டமான வரவேற்பிருந்தது. அந்த ஆயிரக்கணக்கான முகங்களில் வர்ணிக்க முடியாத அநுதாப உணர்ச்சியைக் கண்டேன்.

''இந்தியா ஆத்மீகச் சிறப்புள்ளதொரு நாடு. இயேசுநாதர் மலை உச்சியிலிருந்து நடத்திய போதனையின் பரமானந்தத்தை எந்த ஒரு நாட்டிலாவது காண முடியும் என்றால் அது இந்தியாவில்தான் இருக்க முடியும்.''

தகவல்: குசை இக்னேஷஸ்

## பல்சுவைப் பக்கம்

1



### இருட்டை நீக்கி வெளிச்சம் தரும் கண்ணாடி

இப் பெண்மணி அணிந்திருப்பது சாதாரண மூக்குக் கண்ணாடி அல்ல. இருட்டை நீக்கி வெளிச்சத்தைத்தரும் கண்ணாடி. மோட்டார் மெக்கானிக்குகளும் இதைச் சுலபமாக அணிந்து கொண்டு சௌகரியமாக இரவில் வேலை செய்யலாம். ஒரு ஜெர்மன் ஸ்தாபனம் இதைத் தயாரித்துள்ளது. இதில் பாட்டரி மூலம் ஒளி ஏற்படுகிறது.

- (டாட்- யூ. பி. எஸ்.)

## தூக்க விசித்திரங்கள்

ஆப்பிரிக்காவில் உள்ள யானை நின்று கொண்டே தான் தூங்கும். இளமைப் பருவத்துக்குப் பிற்பட்ட முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளை இது முழுக்க முழுக்க நின்று கொண்டே கழிக்கிறது.

ஆனால் ஆசிய யானை படுத்துக்கொண்டுதான் தூங்குகிறது. பொதுவாக அது காலை பத்து மணியிலிருந்து பகல் மூன்று மணி வரையிலும், இரவு பதினொரு மணியிலிருந்து காலை மூன்று மணி வரையிலும் தூங்கும்.

குதிரைகளால் படுத்துறங்க முடியுமாயினும் அவை நின்று கொண்டு தூங்குவதையே விரும்புகின்றன. படுத்துத் தூங்கினால் அவற்றின் நுரையீரல்கள் அழுத்தப்படுவதே காரணம்.

ஒராங் உடாங் என்ற மனிதக் குரங்கு இலைகளைப் பறித்து மெத்தையாகப் போட்டுக்கொண்டு அதன்மீதே படுத்துறங்கும். மழை பெய்தால் அது இலைகளால் போர்த்திக்கொள்ளவும் செய்யும்.

பறவைகள் கிளைகளில் உட்கார்ந்து கொண்டே தூங்கும். பெரும் புயலடித்தாலும் இவற்றின் பிடிப்பு விடாமலிருப்பது பேராச்சரியம்! பாம்புகளால் கண்களை மூடிக் கொள்ளவே முடியாது. எனினும் அவை தூங்கும்.

மீன்களாலும் கண்களை மூடிக் கொள்ள முடியாது. மேலும் அவை நீரோட்டத்தில் ஒரே இடத்தில் இருப்பதும் சிரமம். இவ்வாறு இருப்பினும் அவை நீருக்கடியே மண்ணில் தங்களைக் குத்திட்டுக் கொண்டு தூங்குகின்றன.

## பல்சுவைப் பக்கம் 2

முல்லைக் கொடி படர்வதற்குப் பாரி மன்னன் தன் தேரைக் கொடுத்தான் அல்லவா? 1860ம் ஆண்டில் ருஷ்யாவில் பீட்டர்ஸ்பர்க் நகரில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்: அப்போது ருஷ்யாவை ஆண்ட ராணி கேதரீன் தன் அரண்மனைக்குத் திரும்பி வரும் வழியில் ஒரு செடி முளை விட்டிருப்பதைக் கண்டாள். வழிப்போக்கர்கள் அதை மிதித்துவிடக் கூடும் என்று பயந்த அரசி அரண்மனைக்குத் திரும்பியதும் அந்த இடத்தில் ஒரு சிப்பாயைக் காவலுக்குப் போட வேண்டும் என்றும், அவன் அந்தச் செடியைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் தன் கைப்பட உத்திரவு எழுதி அனுப்பினாள். இது நடந்து 52 ஆண்டுகள் ஆனபிறகு, 1912 வரை அந்த இடத்தில் ஒரு சிப்பாய் காவல் இருந்தான். ஆனால் செடிதான் இல்லை!

ஆதாரம்: 'திஸ் வீக் மேகசைன்' தகவல்: விஜயா



பாரியைப் போல் ஒரு நாரி

# வியப்பூட்டும் 'ராப் அரவுண்ட்' டிரெட்டினால் பயர்ஸ்டோன் டயர்கள் உங்களுக்கு அளிப்பது



## சுகமான சவாரி!

பயர்ஸ்டோன் கார் டயர்களிலுள்ள வியப்பூட்டும் 'ராப்-அரவுண்ட்' டிரெட் டிசைன், சாலைமீது அதிக பரப்பளவு ரப்பரை பதியச் செய்கிறது. இது காரணமாகவே குண்டும், குழியுமுள்ளவையும் சீரில்லாதவையுமான சாலைகள் மீதும் சுகமான சவாரி சுலபமாகக் கிட்டுகின்றது. மேலும், இதுவே எந்த விதமான மேற்பரப்புள்ள சாலைமீதும் எத்தனை வேகத்திலும் நிலைப்புறுதியையும், இணங்கி வேலைசெய்யும் தன்மையையும் கொடுக்கிறது. இத்துடன் கூட அதிக மைல்கள் ஓடச் செய்வதும், ஒவ்வொரு பயர்ஸ்டோன் டயருக்குள்ளும் அடங்குவதுமான 'கும்-டிப்' என்ற விந்தை ரப்பரின் கற்பலனையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.

**Firestone**

பயர்ஸ்டோன் 'ராப்-அரவுண்ட்' டிரெட் கூடிய டீலக்ஸ் சாம்பியன் டயர்

பயர்ஸ்டோன் உங்களுக்கு தரம், உழைப்பு இவைகளின் சின்னம்.

# நெல் சாகுபடியில் வளர்ச்சி

வை. தி. சுப்பையா முதலியார்

**வை**த்திய வசதிகள், சுகாதார வசதிகள் எல்லாம் பெருகவே, மக்களின் ஆயுட்காலம் கூடி ஜனத்தொகை மிகுதியாகிவிட்டது. அதே அளவிலோ, விகிதத்திலோ உணவு உற்பத்தி அதிகரிக்கவில்லை. உணவுப் பற்றாக் குறை ஏற்பட்டுவிட்டது. இந்தியாவிலும் பல ஆசிய நாடுகளிலும் இந்தப் பரிதாபமான நிலை வந்துவிட்டதைப் பார்க்கிறோம். அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் உபரியாக விளையும் தானியங்களைக் கொடுத்து உதவி வருகின்றன. தேவையான தானியங்களை வாங்குவதற்காக அந்நியச் செலாவணி அதிகமாகத் தேவைப்படுகிறது. உணவு உற்பத்தியை அதிகமாக்கிக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகி விட்டது. அதிர்ஷ்டவசமாக மகசூலை அதிகப்படுத்திக் கொள்வதற்குச் சில புதிய நூதன கண்டுபிடிப்புக்கள் மிக உதவியாயிருக்கும். உணவுக் குறை நீங்கிவிடும். முன்னேறி நாகரிகமடைந்த மேல்நாடுகளில்கூடப் பயனுடைய புதிய விவசாய கண்டுபிடிப்புக்கள் நடைமுறைப் பழக்கத்துக்கு வரக் கால தாமதம் ஏற்படுகிறது. உயர்ந்த மகசூல் தரும் இரு பிறவி (Hybrid) மக்காச் சோளத்தைக் கண்டுபிடித்து இருபது ஆண்டுகள் ஆனபின்னரே அமெரிக்க விவசாயிகள் இரு பிறவிகளை வழக்கமாகப் பயிரிட ஆரம்பித்தனர். இந்தியா போன்ற பின்தங்கிய நாடுகளில் அந்தக் காலதாமதம் இன்னும் அதிகமாகும் என்பதே நமது முன் அனுபவம். ஆனால் காலம் மாறிவிட்டது. புதிய உயர் மகசூல் தரும் வர்க்கங்கள் — (Strains) நூதன ரசாயன உரங்கள், பல பயிர்க் காப்பு முறைகள் இவை யெல்லாம் உயர்ந்த மகசூலுக்கு மிக உதவியா யிருக்குமென எல்லா விவசாயிகளும் விரைவாகவே அறிந்துகொண்டார்கள். முற்போக்கு விவசாயிகள் அவற்றைக் பின் பற்றி அனுகூலமடைகிறார்கள்.

மற்ற விவசாயிகள் அதே பாதையில் செல்ல முயற்சி எடுக்கிறார்கள். ஆனால் முடியவில்லை. பெரும்பாலோர் எளிய நிலையில் இருக்கிறார்கள். பல அபிவிருத்தி முறைகளை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு அவர்களிடம் பொருளாதார வசதியில்லை. இப்பொழுது நிலவும் உயர் விலையில் ஓர் ஏக்கர் நெற்பயிர் சாகுபடி செய்வதற்கு ரூ. 250–350 செலவு ஆகிறது. சிறிய விவசாயிகளாலோ, குத்தகைக்குப் பயிர் செய்யும் சமுசாரிகளாலோ அவ்வளவு செலவு செய்து, தீவிரச் சாகுபடி முறைகளை அனுசரித்துப் பயிர் செய்ய முடியாது. நடுத்தர விவசாயிகளால்தான் தீவிரச் சாகுபடி செய்ய முடியும். அவர்கள் செய்யவும் செய்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு அரசாங்கம் ஊக்கம் அளிக்க வேண்டும். அவர்களால்தான் தானிய உற்பத்தியை அதிகமாக்க முடியும். அவர்களின் சொந்த நன்மைக்காக மட்டுமின்றி நாட்டின் உற்பத்தியைப் பெருக்கவே அது ஒன்றுதான் வழி.

இப்பொழுது இந்தியாவில் உணவுதானிய உற்பத்தியை அதிகமாக்கிக் கொள்ள வேண்டியது அவசியமும் அவசரமுமாகி விட்டதென்பதில் அபிப்பிராய பேதமே இல்லை. இதைச் செயலாக்க (1) உயர் மகசூல் தரும் வர்க்கங்களைப் பயிர் செய்வது. (2) அவற்றுக்குத் தேவையான உரமிடுவது. (3) அவ்வப்பொழுது தோன்றும் பூச்சி நோய்களை அடக்கி வைத்துக் கொண்டு மகசூல் குறைவதைத் தடுப்பது ஆகியன மிக முக்கியமானவை.

எல்லாப் பயிர்களின் விளைச்சலையும் அதிகப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம்தான். எனினும் தமிழகத்தில் நெல் அதிமுக்கியமான தானியப் பயிர். அதனால் நெல் அபிவிருத்தியில் விஞ்ஞானிகளும் அதிகக் கவனம் செலுத்தியிருக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டும். அதன் உற்பத்தியைப் பெருக்கி விட்டாலே, நாட்டின் பொருளாதார நிலையில் ஒரு திருப்பம் ஏற்பட்டு விடும்.

இந்தியாவில் சுமார் பத்து கோடி ஏக்கரில் நெல் பயிராகிறது. சராசரி நெல் மகசூல் ஏக்கருக்கு 981 ராத்தல், அதாவது 392 பட்டணம் படி. ஜப்பானில் நெல் மகசூல் 3,529 ராத்தல், அதாவது 1,428 பட்டணம் படி. இந்திய மகசூலுடன் ஒப்பிட்டால், இது சுமாராக நான்கு மடங்கு. ஜப்பானில் உயர் மகசூல் கிடைக்கிறதென்றால், அதற்கு அங்குள்ள தீவிரச் சாகுபடி முறைகளும், அவற்றுக்கேற்றவாறு பயன்தரக் கூடிய நெல் இனுசுகளுமே முக்கிய காரணங்கள். ஜப்பான் ஒரு சம சீதோஷ்ணப் பிரதேசம். அங்கே ஜப்போனிக்கா நெல் அதிக மகசூல் கொடுக்கக் கூடியது. ஜப்போனிக்கா நெல் இனுசுகள் இந்தியாவில் சிறப்பாக உண்டாவதில்லை. தவிர, சமைக்கும் பொழுது சோற்றுப் பருக்கைகள் ஒன்று சேர்ந்து மொத்தையாகி விடுகின்றன. ஜப்போனிக்காவுடன் இந்தியாவின் நெல் ரகமான இண்டிக்கா வகுப்பைக் கலப்புச் சேர்க்கை செய்து உயர் மகசூல் தரும் வர்க்கங்களை உற்பத்தி செய்வதற்கு இப்பொழுது சிலகாலமாக முயற்சி நடைபெறுகிறது. நாரின்–8 எனும் ஜப்போனிக்கா இனுசு, 'ஜீ. ஈ. பீ.24' எனும் இண்டிக்கா இனுசு இவற்றுள் கலப்புச் சேர்க்கை ஏற்படுத்தி, ஆடுதுறை-27 என்னும் வர்க்கம் சமீபத்தில் உற்பத்தி செய்யப்பட்டது. அது உயர்ந்த மகசூல் தருகிறது. பச்சரிசி, புழுங்கல் அரிசி, பழைய அமுது, தோசை, இட்டிலி எல்லாமே தயாரிப்பதற்குச் சிறந்ததா யிருக்கிறது. சுவையும் திருப்திகரமாக



''என்னடி இது! டேப் ரெக்கார்டரோட எல்லார் வீட்டுக்கும் போயிட்டு வர்றே......?''
''பின்னே என்ன மாமி! எல்லார் வீட்டுக் கொலுவுக்கும் பாடச் சொல்லி உயிரை வாங்கறா; அதனாலே என் பாட்டை ரெக்கார்டு பண்ணிண்டு வந்துட்டேன்......!'' —கந்தர்

இருக்கிறது. அது முதல் பருவக் காலத்தில் ஜூன் – ஜூலை மாதங்களில் நடுவதற்கேற்றது. இரண்டாம் பருவ மழைக்காலத்தில் உண்டாகுமென்றாலும், கொள்ளை நோய்க்கு உள்ளாகக் கூடுமாதலால் அப்பொழுது பயிர் செய்யாதிருத்தல் நலம். பாசன வசதியுள்ள இடங்களில் கோடை காலத்திலும் அதைப் பயிர் செய்யலாம். உயர்ந்தபடியாக ஏக்கருக்கு 6,600 ராத்தல், அதாவது 2,640 பட்டணம் படி, இந்த நெல் மகசூல் கொடுத்திருக்கிறது.

இண்டிக்கா நெல் இனுசுகளில் தானிய உற்பத்தியை விடத் தாள் வளர்ச்சிக்கே நில வளம் அதிகமாகப் பயன்படுவதால், பயிர்கள் உயரமாக வளர்ந்து, சாய்ந்து, கீழே விழுந்து விடுகின்றன. நெல் மகசூல் குன்றி விடுகிறது.

'டீஜீஊஜென்' என்னும் ஓர் இண்டிக்கா நெல் இனுசில், தானுகத் தோன்றிய ஒரு கூழைச் செடியை (Dwarf) சீன விஞ்ஞானிகள் சில காலத்துக்குமுன் கண்டுபிடித்தார்கள். கூழைப் பயிர்த் தாள் குட்டையாக இருப்பதால் பயிர் சாய்ந்து கீழே விழாது. இலைகள் நடு அளவினவாய் மடங்காமல் விறைப்பாய் நிற்கும். எல்லா இலைகளிலும் சரியாக வெயில் அடிபடும். அதனால், மாவுச் சத்து (Starch) அதிகமாகச் சேகரிக்கப்பட்டு, தானிய மகசூல் மிகுதியாகும். கூழை வர்க்கங்கள் வயலுக்கு இடும் நைட்ரஜன் உரங்களை அதிகமாகப் பயன்படுத்திக் கொண்டு உயர்ந்த தானிய மகசூல் கொடுக்கின்றன.

நீண்டகால நெல் இனுசுகளைப் பகற்போதின் வெப்பம் இயக்கும். இவை குறிப்பிட்ட பருவங்களில்தான் சரியாக வளர்ந்து குறிப்பிட்ட காலத்திலேயே கதிர்விட்டு முதிரும். அறுவடைக்குப்பின் தானியங்கள் சிறிது காலம் ஓய்ந்திருந்த பின்னரே முளைக்கும் திறன் பெறும். அவை ஒளி உணர்ச்சி (Photo sensitive) உடைய இனுசுகள். குறுகிய கால இனுசுகள் எந்தக் காலத்தில் சாகுபடி செய்தாலும் குறிப்பிட்ட காலமானதும் கதிர்விட்டு முதிரக் கூடியன. அறுவடையான தானியங்களை உடனே விதைக்கலாம். கூழை இனுசுகளோ எந்தப் பருவத்தில் சாகுபடி செய்தாலும் அவை ஒழுங்காக வளர்ந்து சரியான மகசூல் கொடுக்கும். நீர் வசதியுள்ள இடங்களில் வருடத்தில் மூன்று பயிர்களை ஒன்றன்பின் ஒன்றாகச் சாகுபடி செய்யலாம்.

ஆடுதுறை – 27 ஒரு நைட்ரஜன் பயன் தரும் வர்க்கம். டெய்வானில் உற்பத்தி செய்யப்பட்ட டெயிச்சங் நேட்டிவ்–1, டெயிச்சங் – 65, டெய்னுன் – 3 என்னும் வர்க்கங்களும் அப்படியே. முதல் வர்க்கம் ஓர் இண்டிக்கா. மற்ற இரண்டும் உஷ்ணப் பிரதேச ஜப்போனிக்காக்கள். இந்தியாவில் பல இடங்களில் பயிர் செய்த பொழுது, அவை ஏக்கருக்கு 4,500–600 ராத்தல் அதாவது 1,800–2,400படி நெல் மகசூல் கொடுத்துள்ளன. விசித்திர ஐ. ஆர்–8 என்னும் நெல் வர்க்கம், பிலிப்பைன் தீவில் உள்ள அகில உலக ஆராய்ச்சிக் கூடத்தில் உற்பத்தி செய்யப்பட்டது; இண்டிக்கா வகுப்புத்தான். இந்தியாவில் ஏக்கருக்கு 7,640 ராத்தல் வரை, அதாவது 3,058 பட்டணம் படி, நெல் மகசூல் கொடுத்திருக்கிறது. அது நம்பமுடியாத அளவு உயர் மகசூல் அல்லவா?

பாசுமதி எனும் உயர் ரகநெல் இனுசு வட இந்தியாவில் சாகுபடியாகிறது. ஆனால் மகசூல் குறைந்தது. பாசுமதி, டெயிச்சங் நேட்டிவ் – 1 ஆகிய இரண்டிலும் கலப்புச் சேர்க்கை ஏற்படுத்தி டெயிச்சங் நேட்டிவ்வின் கூழைத்தனம், உயர் மகசூல், பாசுமதியின் உயர் ரகத் தன்மை ஆகியவற்றை இணைத்து, புது தில்லியில் உள்ள இந்திய விவசாய ஆராய்ச்சிக் கூடம் (Indian Agricultural Research Institute) உயர்ந்த வர்க்கங்களை உற்பத்தி செய்து கொண்டிருக்கிறது. 15 சதவிகிதம் புரோட்டீன் சத்துள்ள வர்க்கங்களும் உற்பத்தியாகின்றன.

நெல்லைவிட அதிகப் புரோட்டீன் சத்துள்ளது என்பதற்காகக் கோதுமைக்கு மக்கள் அதிக மதிப்புக் கொடுக்கிறார்கள். அப்படி ஒப்பிடுவது முற்றிலும் பொருந்தாது. உடம்புக்குத் தேவையான அமினோ அமிலங்களில் எவை எவை, எந்த எந்த அளவில் ஜீரணமாகும் புரோட்டீன் பகுதிகளில் அடங்கியிருக்கின்றன என்பதைப் பொறுத்தே புரோட்டீனுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். அதை உயிரியல் மதிப்பு (Biological value) என்பர். கோதுமைப் புரோட்டீனைவிட அரிசிப் புரோட்டீன் அதிக உயிரியல் மதிப்புடையது. மேலே சொன்ன பதினைந்து சத விகிதம் புரோட்டீனுள்ள நெல் இனுசை வரவேற்க வேண்டியதே.









ALFABEX
ALFALFA TONIC
WITH
VITAMIN B COMPLEX






BAHOLA




**ப**ச்சைத் தண்ணீரில் முகம் கழுவித் துண்டால் துடைத்துக்கொண்டே ஆயாசத்துடன் பெஞ்சியில் உட்கார்ந்தார் ரகுபதி. பெஞ்சியின்மேல் தம்ளரில் வைத்திருந்த காப்பியை எடுத்துப் பார்த்ததும் அதில் ஓர் ஈ விழுந்து இறந்து மிதந்து கொண்டிருந்தது தெரிந்தது. 'ஈயை எடுத்து வெளியே போட்டு விட்டுக் காப்பியைச் சாப்பிட்டால் என்ன?' என்றுகூட இரவு முழுதும் இருமிக் காய்ந்து போன நெஞ்சு ஒருகணம் யோசித்தது; மறுகணம், ஒரு நாள் காப்பி சாப்பிடவில்லை யென்றால் உயிரா போய்விடப் போகிறது?' என்ற எண்ணம் உதித்தது. என்ன இருந்தாலும் பெஞ்சியில் வைத்த காப்பியை மருமகள் ஒரு தட்டினால் மூடியிருக்கலாம். அவளைச் சொல்லுவானேன்? நாம் காப்பி குடித்தாக வேண்டும் என்று அவளுக்கென்ன அக்கறை? காப்பி கொடுக்க வேண்டும்; அவ்வளவுதான். அதைக் குடித்தாலும், கொட்டினாலும் அவளுக்கு ஒன்று தான். எண்பது வயதை எட்டி இப்படி நடைப் பிணமாகக் கூடத்துப் பெஞ்சியில் கொலுவிருக்கும் மாமனாரை உபசரித்துக் காப்பி கொடுக்க அவளுக்குப் பைத்தியமா? எல்லாம் நம் தலைவிதி.

காப்பியை ஜன்னல் வழியாகக் கீழே கொட்டிவிட்டுத் தம்ளரைப் பெஞ்சியில் வைத்தார் ரகுபதி. காப்பியில் விழுந்து இறந்த ஈ இறகுகளைப் பரப்பிக் கொண்டு உயிரிழந்து கிடந்தது. அத்தனை காப்பியையும் குடித்து விடலாம் என்று காப்பியில் விழுந்த ஈ அந்த இனிக்கும் காப்பியைக் குடித்து அதில் மூழ்கி இறந்திருக்கிறது. உலகத்தில் ஆசைகளுக்கு அடிமையாகி, குடும்பம், குழந்தைகுட்டிகள் என்று ஏற்படுத்திக் கொண்டு அந்த மாயையில் லயித்து அதிலே முழுகி முழுகி, மனிதனும் இறந்து விடுகிறான்.

ஆதியில் ரகுபதி நன்றாகச் சம்பாதித்தவர் தான். அவருக்கு ஒரு பெண்; இரண்டு ஆண். பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார். மூத்த பிள்ளை நல்ல உத்தியோகத்தில் இருக்கிறான். பணக்கார இடத்துப் பெண் அவனுக்கு மனைவியாக வந்திருக்கிறாள். அவனுக்கும் நாலு குழந்தைகள். ரகுபதியின் இரண்டாவது பிள்ளைக்கும் நல்ல உத்தியோகம். இனிமேல்தான் கலியாணம் ஆக வேண்டும். கலியாணம் பேச யார் யாரோ காரிலும் ரயிலிலும் விமானத்திலுமாக வெளியூர்களிலிருந்து வந்து பிள்ளையிடமும், மருமகளிடமும் இழைந்து இழைந்து பேசிவிட்டுப் போகிறார்கள். பெற்றவன் என்ற பெயரில் பெஞ்சியில் கிடப்பவரை யாரும் கவனிக்கவுமில்லை; பார்க்கவும் இல்லை. மனைவி சிவகாமு போன பின் அவரிடம் யாருமே பேச்சுக் கொடுப்பதில்லை. அதற்கு அந்த வீட்டில் யாருக்கும் பொழுது இல்லை. வேளாவேளைக்கு ஏதோ வயிற்றுக்குக் கொடுப்பார்கள். ஏதாவது பேச முயன்றால், ''உங்களுக்கு எதற்கு இந்தத் தொல்லையெல்லாம்? பேசாமல் ராமஸ்மரணை பண்ணிக்கொண்டிருங்கள்'' என்பார்கள்.

'இப்படித் தாம் அலட்சியப்படுத்தப்படுவதற்கு என்ன காரணம்?' என்று ரகுபதி எத்தனையோ முறை யோசித்துப் பார்த்திருக்கிறார். தவிர குடும்பம் என்று ஏற்பட்ட பிறகு அவரால் விட்டேற்றியாக இருக்க முடியவில்லை. உதாரணமாக, மருமகள் சினிமா, நாடகம் என்று இரவு பத்து மணி வரையில் கண் விழித்து விட்டு வருகிறாள். 'இப்படித் தூக்கம் விழிக்காதே அம்மா, பித்தம் வந்து சேரும்' என்று சொல்லாமல் இருக்க முடியவில்லை. பேரன் வெய்யிலில் விளையாடுகிறான்; 'வெயிலில் அலையாதேடா' என்று கண்டிக்கத் தோன்றுகிறது. ஆபீசில் நடந்த ஒரு விஷயத்தைத் தம்பி அண்ணனிடம் சொல்லிக் கொண்டிருக்கிறான். 'என்னடா அது?' என்று கேட்கத் தோன்றுகிறது. வீட்டு வேலைக்காரியைக் கூட 'நன்றாகப் பெருக்கவில்லை' என்று குறை கூறத்தான் வேண்டியிருக்கிறது.

தான் எது பேசினாலும் அது பிறருக்குத் தப்பாகவே தோன்றுகிறது. இதற்கு என்ன காரணம்? ஒருவேளை வேறு வேலை எதுவும் இல்லாமல் நினைப்பதற்கும் புதிதாக எதுவும் இல்லாமல், பழைய நிகழ்ச்சிகளையே திரும்பத் திரும்ப அசை போட்டுக் கொண்டு உலகமே நம் குடும்பத்தில்தான் என்று குடும்பத்தில் அதிகப் பற்று வைத்துக் கொண்டிருப்பதனால் இருக்குமோ? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அவருக்கு விடை கிடைப்பதில்லை.

எப்படியோ இன்று காலை காப்பி கிடையாது. பகல் பதினொரு மணிவரையில் கொட்டுக் கொட்டென்று உட்கார்ந்திருக்க வேண்டியதுதான். உம், ஒவ்வொருத்தன் எதை எதையெல்லாமோ தியாகம் செய்கிறான். ஒரு வேளை காப்பியைத் தியாகம் செய்வது சிரமமா? பெஞ்சியில் சாய்ந்தார்.

அந்தக் காலத்தில் ஆபீசில் 'ரகுபதி, நீங்க இதற்கு என்ன சொல்கிறீர்கள்?' என்று மேலதிகாரி கூட அவரிடம் யோசனை கேட்பார். வீட்டிலும் அவர் பேச்சுக்கு நல்ல மதிப்பு இருந்தது. வெளியிலும் பொது இடங்களிலும், உறவினர்களிடமும் அவர் பேச்சை எல்லோரும் வரவேற்றார்கள். இப்பொழுது அவர் பேச்சும், முற்றத்து மதிலில் உட்கார்ந்து கத்தும் காகத்தின் குரலும் ஒரே மாதிரியாகத்தான் அந்த வீட்டில் மதிப்பிடப்பட்டிருந்தன.

சாப்பாட்டு அறையில் பிள்ளை சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ''இன்னும் கொஞ்சம் கத்திரிக்காய் கூட்டு போடட்டுமா? சேனை வறுவல் உங்களுக்குப் பிடிக்குமே என்றுதான் வறுத்தேன்'' என்று மருமகள் பிள்ளையை உபசரித்ததிலிருந்து இன்றையச் சமையல் கத்திரிக்காய்க் கூட்டு, சேனை வறுவல் என்று புரிந்தது. சமையல் கட்டிலிருந்து வாசனை வந்ததிலிருந்து முருங்கைக்காய் சாம்பார் என்றும் தெரிந்து கொண்டார். ரகுபதி சேனைக் கிழங்கு வறுவலைப் பல் இல்லாத தனால் மென்று தின்ன முடியாது. கத்திரிக்காய்க் கூட்டை வைத்துக் கொண்டு சாப்பிட வேண்டியதுதான். 'இந்தக் கத்திரிக்காய்க் கூட்டு செய்வதற்குப் பதில் நிறைய எண்ணெயை ஊற்றிக் காரம் போட்டுக் கறி செய்தால் எத்தனை நன்றாக இருக்கும்! அதுவும் சிவகாமு செய்ய வேண்டும். எண்ணெய் பளபளக்கத் தாளிதத்தில் மிதக்கும். அவருக்கு நாக்கில் ஜலம் ஊறியது. ருசி ருசியாகச் சமைத்து நாக்கை வளர்த்து விட்டு அவள் போய்விட்டாள். நான் திண்டாடுகிறேன்.'

யோசனையில் இருந்தவர் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு இளைய பிள்ளை ராஜா வெளியே கிளம்புவதைப் பார்த்ததும், ''மணி ஒன்பதுதானே ஆச்சு. இதற்குள் ஆபீசுக்குக் கிளம்பிவிட்டாயா?'' என்று வாய் தவறிக் கேட்டுவிட்டார்.

ராஜாவுக்குக் கோபம் வந்து விட்டது. ''என்னப்பா வெளியே கிளம்பும்போது குறுக்கிடுகிறீர்கள்? நான் எங்கேயோ போகிறேன். உங்களுக்கு என்ன அதைப் பற்றி? உங்களிடம் சொல்ல வேண்டிய விஷயமாக இருந்தால் சொல்லாமல் இருப்பேனா?'' என்று பொரிந்து தள்ளிக் கொண்டே அவன் வாசல் பக்கம் போய்விட்டான். சற்று நேரத்துக்கெல்லாம் ஸ்கூட்டர் கிளம்பும் ஓசை கேட்டது. 'இனிமேல் யாரிடமும் எதையும் பேசக் கூடாது. அவர்கள் சொல்லுவது போல் "ராம ஸ்மரணை" பண்ணிக்கொண்டு பேசாமல் பெஞ்சியில் முடங்கிக்கொள்ள வேண்டியதுதான்' என்ற முடிவுக்கு வந்தார் ரகுபதி.

அன்று இரவு சாப்பாட்டுக்குப் பின் இரண்டு பிள்ளைகளும் மருமகளுமாக ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். நடக்கவிருக்கும் இரண்டாவது பிள்ளையின் கலியாணத்தைப் பற்றியதாகவே இருந்தது, அவர்கள் பேச்சு. வரப்போகும் பெண்ணின் அழகு, அவள் கொண்டுவரவிருக்கும் சீர் வரிசைகள், இவைகளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் பேச்சிலிருந்து பெண் மிகவும் பணக்கார வீட்டுப் பெண் என்று தெரிந்தது ரகுபதிக்கு. இனிமேல் கலியாணக் காரியத்தை ஆரம்பித்து விடுவார்கள். ஊமை போல்



எல்லாவற்றையும் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். எத்தனையோ வேலைகளைக் கவனிக்கும் நெருக்கடியில் வேளா வேளைக்குச் சாப்பாடு போடக் கூட மறந்து விடுவாள் மருமகள். இப்படிப்

பூமிக்குப் பாரமாக இருப்பதை விடப் பேசாமல் கண்ணை மூடிவிட்டால் நல்லது.

பொழுது விடிவதும் அஸ்தமிப்பதுமாக நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. இரண்டு நாட்களில் எல்லோரும் கலியாணத்துக்கு மதுரைக்குக் கிளம்பியாக வேண்டும். வீடு நிறைய வந்திருந்த விருந்தினரும் குழந்தைகளுமாகக் கலகலவென்றிருந்தது.

அன்று இரவு சாப்பிடும் போது ஒரு பிரச்னை கிளம்பியது. அதாவது



ரகுபதியைக் கலியாணத்துக்கு கூட்டிக்கொண்டு போக வேண்டுமா? இல்லை, வீட்டிலேயே விட்டு விட்டுப் போகலாமா என்பது பற்றி. இந்தப் பிரச்னையைக் கிளப்பியவள் மருமகள்தான். சற்று நேரம் யாருமே பேசவில்லை. தக்காளி ரசத்தைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த ராஜாவின் முகம் இந்தப் பிரச்னையைக் கேட்டதும் ஏதோ கசப்பை விழுங்குவது போல் மாறியது. பெஞ்சியில் உட்கார்ந்து காலுக்கு நீலகிரித் தைலம் தடவிக் கொண்டிருந்த ரகுபதி ஜன்னல் வழியாகச் சாப்பாட்டு ஹாலில் நடப்பதைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தார். ''அப்பாவுக்கு இந்தப் பிரயாணமெல்லாம் சரிப்படாது. இந்த வெய்யில் காலத்தில் நிம்மதியாக இங்கேயே இருக்கட்டும். பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணி விடலாம்'' என்றான் மூத்த பையன்.

''பெண் வீட்டார் ஏன் மாமனார் வரவில்லை என்று கேட்டால் என்ன சொல்வது?'' என்று இழுத்தாள் மருமகள்.

''அப்படி ஒன்றும் அவர்கள் கேட்க மாட்டார்கள். கேட்டால் அவருக்கு உடம்பு சரியில்லை என்று நான் பதில்சொல்லிக் கொள்கிறேன். தோட்டக்காரனையும் எங்கள் ஆபீஸ் பியூனையும் அப்பாவுக்குத் துணையாக இங்கேயே தங்கச் சொல்லிவிடுகிறேன். நாம்தான் இரண்டு நாட்களில் திரும்பி விடுகிறோமே!'' என்றான் பிள்ளை.

தன்னைப் பற்றிய பிரச்னைக்குத் தன்னைக் கேட்காமலேயே முடிவு கட்டி விட்டார்கள். கொட்டிலில் கட்டியிருக்கும் மாட்டுக்கும் பெஞ்சியில் முடங்கிக் கிடக்கும் தனக்கும் இந்த வீட்டில் சம அந்தஸ்து கிட்டியிருப்பதை உணர்ந்தார் ரகுபதி.

மறுநாள் விடியற்காலையில் எல்லாருமே கிளம்பி விட்டார்கள். போகும் போது மருமகள், ''உங்களுக்குப் பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் சாப்பாடு கொண்டு வரச் சொல்லியிருக்கிறேன். நாங்கள் இரண்டே நாட்களில் வந்து விடுவோம். துணைக்குத் தோட்டக்கார முனியன் இருப்பான்.''

''உம்'' என்றார் ரகுபதி.

''உங்களையும் அழைத்துப் போய் அலைய வைக்க வேண்டாம் என்றுதான் இங்கு விட்டு விட்டுப் 'போகிறோம்'' என்றான் பிள்ளை.

அதற்கும் ''உம்'' என்ற பதில்தான் ரகுபதியிடமிருந்து வந்தது.

எல்லோரும் போய்விட்ட பின் வீடு வெறிச்சென்றிருந்தது. காலை ஒன்பது மணிக்கே காமுப் பாட்டி சாப்பாட்டுடன் வந்துவிட்டாள். வந்தவள் இலையைப் போட்டு விட்டு, ''பத்தியமாக ஜீரக ரசம், பருப்புத் துவையல், அப்பளாம் கொண்டு வந்திருக்கிறேன்'' என்றாள். அவர் சாப்பிடும்போது பேச்சை ஆரம்பித்தாள். ''என்ன இருந்தாலும் நீங்கள் இப்படிச் செய்திருக்கக் கூடாது. இங்கிருந்து மதுரை வரையில் போவது ஒரு சிரமமா? கலியாணத்துக்கு வர மாட்டேன் என்று சொல்லி விட்டீர்களாமே? உங்கள் மாட்டுப் பெண் சொன்னாள். முதல் வகுப்புப் பெட்டியில் படுக்கையைப் போட்டுப் படுத்தீர்களானால் பொழுது விடிந்ததும் மதுரை வந்துவிடுகிறது. வயசாகிவிட்டால் நாம் பிடிவாதத்தை எல்லாம் விட்டுவிட வேண்டும். நமக்காக வாழாமல் குழந்தைகளுக்காக வாழ்ந்தால்தான் நல்லது. என்னமோ எனக்குத் தோணினதைச் சொன்னேன். கோபித்துக் கொள்ளாதீர்கள்.... இன்னும் கொஞ்சம் ரசம் போடவா?''

ரகுபதி துயரத்துடன் வாளாவிருந்து விட்டார்.

புதிய தொழில்களை நிறுவுவதற்கான

செவ்வையான திட்டமும், அவற்றை

வெற்றிகரமாக நடத்துவதற்குத்

தேவையான வழிவகையறிவும்

திறமையும் படைத்திருந்தும்கூட,

போதுமான நிதிவசதி படைத்

திராத தொழில்தீரர்களுக்கு ஸ்டேட்

பாங்க் கடன்களை வழங்குகிறது

என்பது உங்களுக்குத் தெரியுமா?

''நன்றாகச் சாப்பிடுங்கள். இல்லாவிட்டால் உங்கள் மருமகன் என்மேல் கோபித்துக் கொள்வான்'' என்றாள் காமுப் பாட்டி.

பாட்டி போய்விட்டாள். ரகுபதி சிந்தனையில் ஆழ்ந்தார். 'இந்த உலகத்தில் அன்பு என்னும் சொல்லுக்கு அர்த்தமே இல்லையா? எல்லோரும் எல்லோரிடத்திலும் காட்டும் அன்பும் பரிவும் வெறும் வெளி வேஷம் தானா? இல்லை; தனக்கு இனிமேல் இவர்களால் பிரயோசனமில்லை என்று தோன்றி விட்டால் அன்பு குறைந்து விடுகிறதா?'

கறவை நின்றுபோன பசுவிடமும், வேலை விட்டு நின்றுபோன வேலைக்காரியிடமும் கிழிந்த துணியிடமும் அன்போ பரிவோ காட்ட முடிகிறதில்லையே. வாடிய மலரை உதறுவது போல் தனக்கு வேண்டாதவைகளையும் இந்தக் காலத்தில் சுலபமாக உதறி விடுகிறார்கள். ரகுபதிக்குக் கோபமாக வந்தது. 'இனிமேலும் இப்படி அலட்சியப்படுத்தப் பட்டு இந்த வீட்டில் இருக்க வேண்டுமா?' என்ற எண்ணம் தோன்றியது. மறுநாளும் இதே சிந்தனை தொடர்ந்தது. 'நாம் வீட்டை விட்டுப் போய்விட்டாலும் யாரும் கவலைப் படப் போவதில்லை. எல்லோருக்கும் நிம்மதியாகத்தான் இருக்கும். மேலும், மேலும் யோசித்துக் கொண்டிருந்தால் குடும்பத்தை விட்டுப் பிரியவே மனம் வராது. ஆகையினால் கையிலிருக்கும் நூறு ரூபாயுடன் ரயிலேறி விட வேண்டியதுதான். ஏதாவது கோவில் குளம் என்று போய் மீதி நாட்களைக் கடவுள் மேல் பற்று வைத்து, துறவி போல் வாழ வேண்டியதுதான்' என்ற உறுதியுடன் கம்பளிப் போர்வை, இரண்டு வேஷ்டி, பனியன்கள், துண்டுகள் இப்படி முக்கியமாக வேண்டியவைகளை ஒரு பையில் போட்டு வைத்தார். 'காலை ஐந்து மணி வண்டிக்குக் கிளம்பிவிட வேண்டும்' என்ற எண்ணத்துடன் படுத்தார். அவருக்கு உறக்கமே பிடிக்கவில்லை. இத்தனை வருஷங்களாகப் பாசப் பிணைப்புடன் வளர்த்த குடும்பத்தை உதறுவது என்பது அத்தனை எளிதாகத் தோன்றவில்லை. 'இன்று ஒரு நாள்தான் இந்தப் பெஞ்சியில் படுக்கை. நாளை எந்த ரயிலில் எப்படிப் படுத்துக் கொண்டிருப்போமோ?' யோசித்துக் கொண்டே கண்ணயர்ந்து விட்டார்.

கலகலவென்ற பேச்சும், ஆள் நடமாட்டமும் குழந்தைகளின் அழுகையும் சேர்ந்து ஒரே சந்தடியாக இருக்கவே மெதுவாக ரகுபதி கண்ணைத் திறந்தார். முதலில் ஏதோ ஸ்டேஷனில் படுத்து உறங்கிவிட்டோமோ என்றுதான் அவருக்குத் தோன்றியது. கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்ததும் எதிர்ச் சுவர்க் கடிகாரம் ஆறடித்துவிட்டிருந்தது. அதே பெஞ்சு, அதே வீடு. கலியாணம் முடிந்து எல்லோரும் திரும்பி விட்டார்கள்; அதுதான் இத்தனை சந்தடி என்று தெரிந்தது. பெண்ணுடன் சம்பந்தி வீட்டார்களும் வந்திருப்பது தெரிந்தது. அநியாயமாகத் தூங்கி விட்டோமே, நம் திட்டமெல்லாம் குலைந்து விட்டதே. இனிமேல், வீட்டை விட்டு வெளியேற இதுபோல் ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமா என்று நினைத்து வருந்தினார் ரகுபதி.

குழாயடியிலும் ஹாலிலும், சமையற்கட்டிலும் விருந்தினர்கள் நடமாடிக் கொண்டிருந்தனர். எல்லார் முகத்திலும் பிரயாணக் களைப்பு. காப்பி, டிபன் என்று ஒரு பக்கம் நடந்து கொண்டிருந்தன. குழந்தைகள் கூச்சலும் சளசளவென்று பெரியவர்கள் பேச்சும் காதைத் துளைத்தது.

பேச்சுக்கு நடுவே ஒரு குரல் கோபமாகக் கேட்டது. ''எனக்கு அப்பவே சந்தேகம் தான். மாப்பிள்ளை எதற்காக அங்கவஸ்திரத்தினால் இப்படி உடம்பை மறைத்துக் கொள்கிறார் என்று. இப்போதுதான் அவர் மார்பில் ஏதோ வெள்ளையாக இருப்பது தெரிகிறது. டாக்டரைக் காட்டி அது வியாதி இல்லை என்று தெரிந்தால்தான் எங்கள் பெண் இந்த வீட்டில் வாழ்வாள்'' என்றது அந்தக் குரல். அது பெண்ணின் தகப்பனாருடைய குரலாகத்தான் இருக்க வேண்டும்.

''சார்! அவசரப்படாதீர்கள். குழந்தையில் என் தம்பி தீபாவளிக்குப் பட்டாஸ் வெடிக்கும்போது உடம்பில் பட்டு அது புண்ணாகி, அந்த இடத்தில் தோல் வெள்ளை நிறத்துக்கு வந்து விட்டது. அவ்வளவுதான்; பார்க்கிறவர்கள் இப்படி ஏதாவது சந்தேகத்தைக் கிளப்புவார்களே என்றுதான் கலியாணத்தின்போது அங்கவஸ்திரத்தினால், உடம்பைப் போர்த்திக் கொண்டிருந்தான்!'' இப்படிச் சமாதானம்சொன்னவன் மூத்தவன்.

''அதென்னவோ எனக்குத் தெரியாது. என் மனைவியின் ஒன்றுவிட்ட தம்பி மாம்பலத்தில் டாக்டராக இருக்கிறான். அவன் வந்து பார்த்து ஒன்றுமில்லை என்று சொன்னால்தான் எங்களுக்குத் திருப்தி'' என்றார் பெண்ணின் தந்தை.

''இதோ பாருங்கள். டாக்டர்தான் வந்து பார்க்கட்டுமே. ஒன்றுமில்லை என்றால் ஏன் யோசிக்கிறீர்கள்?'' என்று சமாதானப் படுத்த முயன்றார் பெண்ணின் மாமா.

இதற்குள் கசகசவென்று பெண்களிடையே பேச்சும், மெல்லிய விசும்பல் ஒலியும் தொடங்கின.

''இதற்குத்தான் நான் அப்பவே சொன்னேன். பிள்ளையை நன்றாகப் பார்க்காமல் நல்ல உத்தியோகம், அழகன், என்று பெண்ணைக் கொடுத்தீர்கள். இப்பொழுது எப்படியாயிற்று பார்த்தீர்களா? நான் சொன்னால் உங்களுக்குக் கோபம் வந்துவிடும்'' என்றான் பெண்ணின் அண்ணா.

இதுவரையில் பேசாமல் இருந்த ராஜா, ''அண்ணா! என்னை எந்த டாக்டரும் பரிசோதிக்க நான் அனுமதிக்க மாட்டேன். நம் பேச்சில் நம்பிக்கை இல்லையென்றால் அவர்கள் பெண்ணை அழைத்துக் கொண்டு போகட்டும்'' என்றான் கோபத்துடன்.

''டாக்டரைப் பரிசோதித்துப் பார்க்க நாங்கள் அனுமதிக்க மாட்டோம். எங்களுக்கு அது அவமானம். உங்கள் இஷ்டப்படியே பெண்ணை அழைத்துக் கொண்டு போகலாம்'' என்றான் பெரிய பிள்ளை.

''அப்படியானால் உடனே கிளம்ப வேண்டியதுதான். டேய் மூர்த்தி, டாக்ஸி கொண்டுவா; அம்மா ஹேமா, கிளம்பு, போகலாம்.... நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதான்'' என்றார் பெண்ணின் தந்தை.

ஹேமா குலுங்கக் குலுங்க அழுதுகொண்டிருந்தாள். அவளை ஒருமுறை பார்த்துவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான் ராஜா.

கையில் கட்டியிருந்த மஞ்சள் சரட்டைக் கூடக் கழற்றாமல், ஜரிகை வேஷ்டியும், சில்க் சட்டையுமாக மாப்பிள்ளைக் கோலம் கலையாமல், கண்ணில் நீர் மல்க, உட்கார்ந்திருந்த ராஜாவைப் பார்த்ததும் ரகுபதிக்குப் பரிதாபமாக இருந்தது.

பெஞ்சியிலிருந்து எழுந்து கைத்தடியை ஊன்றிக் கொண்டு ஹாலுக்கு வந்தார் அவர். அவரைப் பார்த்ததும் ராஜாவும் மூத்த பிள்ளையும் முகத்தைச் சுளித்தார்கள். ரகுபதி எதையும் கவனிக்கவில்லை.

ஒருமுறை கண்கலங்க நிற்கும் கலியாணப் பெண்ணைப்பார்த்துவிட்டு ''சம்பந்தி! அவசரப் படாதீர்கள். பிள்ளையைப் பெற்றவன் என்ற முறையில் நான் சொல்லுகிறேன். ராஜாவின் மார்பில் இருக்கும் வெள்ளைத் தழும்பு பட்டாஸ்வெடித்ததனால்ஏற்பட்டதுதான். ராஜா இளமை வேகத்தால் முன் பின் யோசியாமல் டாக்டர் பார்க்கக் கூடாது என்று பிடிவாதம் பண்ணுகிறான். நீங்கள் கோபப்படுவதிலும் தவறில்லை. நீங்களாவது என் பேச்சை நம்புங்கள்'' என்றார்.

அவரையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த சம்பந்தியின் முகத்தில் வியப்பும், பயபக்தியும் தோன்றின.

''சார்! நீங்க ரகுபதி சார் இல்லே? முன்பு திருச்சியில் பாங்கில் வேலையாக இருந்தீர்களே!'' என்று ஆரம்பித்தார். ரகுபதி யோசித்தார். சம்பந்தி தொடர்ந்தார். ''என்னைத் தெரிகிறதா உங்களுக்கு? உங்கள் கீழ் வேலை செய்த பரசுராமன் சார் நான். நான் பாங்கியில் செய்த ஒரு தவற்றைக்கூட, அது என் வாழ்வுக்கே உலை வைத்துவிடும் என்பதால் உங்கள் கைப்பணத்தைக் கட்டி என்னைக் காப்பாற்றினீர்களே. எனக்கு வாழ்வளித்தீர்களே. உங்கள் பேச்சிலா எனக்கு அவநம்பிக்கை? நல்லவேளை. நல்ல சமயத்தில் வந்து காப்பாற்றினீர்கள். என் வாழ்வு நீங்கள் போட்ட பிச்சை. என்னமோ 'பிஸினஸ்' பண்ணிக் கொஞ்சம் பணம் சம்பாதித்துவிட்டேன். என்றாலும் அந்த நாட்களில் நீங்கள் எனக்கு உதவியிருப்பதை என்னால் மறக்கவே முடியாது. உங்கள் பிள்ளைதான் ராஜா என்று முன்னமே தெரிந்திருந்தால் இப்படி ஓர் அசம்பாவித நிகழ்ச்சியே நடந்திருக்காது. போகிறது மாப்பிள்ளை. நடந்ததை மறந்து விடுங்கள். ரகுபதி சார்! நமஸ்காரம் பண்ணுகிறேன்'' என்று லக்ஷாதிபதியான சம்பந்தி இடுப்பில் துண்டைச் சுற்றிக் கொண்டு கீழே விழுந்து வணங்கினார்.

அதைப் பார்த்து எல்லோரும் வாயடைத்து நின்று விட்டார்கள். வணங்கி எழுந்த சம்பந்தி, ''ஆமாம்... நீங்கள் ஏன் கல்யாணத்துக்கு வரவில்லை? நீங்கள் வந்திருந்தால் நான் எத்தனை சந்தோஷப்பட்டிருப்பேன்'' என்றார்.

ஹால் ஓரத்தில் தலையைக் குனிந்துகொண்டு நின்றிருந்த மருமகளைப் பார்த்துவிட்டு, ''எனக்கு உடம்பு கொஞ்சம் முடியவில்லை. பிள்ளைகளும் மருமகளும் நீங்கள் வந்தால்தான் ஆயிற்று என்றார்கள். நான்தான்



'' காப்பி ராகம் பாடுகிறேன், கேட்கிறேளா?''
''அடடா! டாக்டர் எனக்குக் காப்பி ஆகாதென்றார். அதனாலே ஹார்லிக்ஸ் ராகம் இருந்தால் பாடுங்களேன்!''

மறுத்துவிட்டேன்'' என்று ரகுபதி ஒரு பொய்யைச் சொல்லி வைத்தார். தங்கள் மானத்தைக் காப்பாற்றிய ரகுபதியை நன்றிப் பெருக்குடன் பார்த்தார்கள் பிள்ளைகளும் மருமகளும்.

''எங்கே ஹேமா! மாமனாரை நமஸ்காரம் பண்ணு'' என்றார் சம்பந்தி. ஹேமாவுடன் ராஜாவும் தந்தையை நமஸ்கரித்தான். அவர்கள் கண்களில் நீர் நிறைந்திருந்தாலும் உள்ளம் மகிழ்ச்சியால் திளைப்பதைத் தெரிந்து கொண்டார் ரகுபதி.

முன் ஹாலில் மின்சார விசிறிக்கு அடியில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து சம்பந்தியுடனும் மற்றவர்களுடனும் கலகலவென்று பேசிக் கொண்டிருந்தார் ரகுபதி. பிள்ளைகளும் அவர் பெருமையை அனுபவத்தால் உணர்ந்த பின் அவரைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். ஹேமாவும் ராஜாவும் கடைக் கண்ணால் பார்த்துச் சிரித்துக் கொண்டே தங்களுக்கு வாழ்வளித்த ரகுபதியை நன்றிப் பெருக்குடன் பார்த்ததை அவரும் கவனிக்காமல் இல்லை. பெஞ்சியின் ஓரத்தில் வைத்திருந்த பிரயாணப் பை அவரைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது அவருக்கு. மறுபடியும் குடும்பத்தில் ஆழ்ந்து விட்டார் அவர்.

குடும்பச் சிக்கலிலிருந்து விடுபட அத்தனை எளிதில் முடியுமா? துறவிக்கு ஆசா பாசங்கள் கிடையாது. ஆசா பாசங்களையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டே ஏதோ தமக்குப் பிடிக்காத சில காரணங்களுக்காக மட்டும் துறவிக் கோலம் போட நினைத்த தமது செய்கை அவருக்குச் சிரிப்பை ஊட்டியது. பாசம் விடாத ஒரு சாதாரண மனிதன்தான் தாமும் என்ற உண்மைத் தெளிவுடன் கையிலிருந்த காப்பியை ஆற்றினார் ரகுபதி. இன்று மருமகள் கவனத்துடன் கலந்திருந்த அந்தக் காப்பியில் ஈ இல்லை; நறுமணம் நிறைந்த சுவை இருந்தது.




★ தமிழறியும் பெரியார்

★ அறிவின் சரிவு

★ அரசினரும் ஆசிரியர்களும்

★ உள்நாட்டார் வணங்கட்டும்!

★ காமகோடியின் கருணை மொழி

சமீபத்தில் பெரியார் அவர்கள், 'தமிழ் காட்டுமிராண்டி மொழி, அதைக் கைக்கொள்வது மிகக் கடினம்' என்று பேசியிருப்பதைக் கண்டு திடுக்கிடாத தமிழர்கள் இருக்க முடியாது. பெரியார் அவர்கள் தமிழர்கள் தமக்குக் கொண்டாடிய பிறந்த நாள் விழாவில் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளி, தமது 'நன்றி உணர்ச்சி'யை வெளிப்படுத்தியிருக்கிறார். தந்தை பெரியார் இவ்வாறு கூறியுள்ளதில் ஆச்சரியமே இல்லை. ஆனால் அவரது பொன்மொழிகளைக் கேட்டு, எடைக்கு எடை தங்கம் அளிப்பவர்கள் இதை ஆட்சேபிக்காததுதான் ஆச்சரியம்.

பிள்ளையார் உடைப்பு, இராமாயண எரிப்பு, அரசியல் சாஸன எரிப்பு எல்லாவற்றுக்கும் சிகரமாகத் தமிழையே தாக்கத் தொடங்கி விட்டார் திரு பெரியார்.

பம்பாய் க. வெங்கடராமன்

சில பள்ளிகளில் வேண்டாத அரசியல் சூழ்ல்களிலும், அறிவைக் கெடுக்கின்ற நாஸ்திக வாதங்களிலும் இளம் உள்ளங்களின் கவனத்தைத் திருப்பி அறிவைக் கெடுக்கின்றனர். உதாரணமாகத் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சார்ந்த தாத்தையங்கார் பேட்டை அரசினர் உயர்நிலைப் பள்ளி 11-ம் வகுப்பு காலாண்டுத் தேர்வு தமிழ் இரண்டாம் வினாத் தாளில் ஆறாவது வினாவாக 'திரண்ட கருத்தினைச் சுருக்கி வரைக' என்பதாகக் கொடுக்கப் பெற்றுள்ள பாடலைப் பாருங்கள்:

இருட்டறையில் உள்ளதடா உலகம்! ஜாதி
இருக்கிறதென்பானும் இருக்கின்றானே!
மருட்டுகின்ற மதத் தலைவர் வாழுகின்றாரே!
வாயடியும் கையடியும் மறைவதெந்நாள்?
சுருட்டுகின்றார் தம்கையில் கிடைத்தவற்றைச்
சொத்தெல்லாம் தமக்கென்று சொல்வார்
தம்மை
வெருட்டுவது பகுத்தறிவே! இல்லையாயின்,
விடுதலையும் கெடுதலையும் ஒன்றேயாகும்!

தமிழில் எவ்வளவோ சிறந்த பாடல்கள் இருந்தும் இப்பாடல் இடம்பெற்றது ஏனோ?

தா. பேட்டை பொய்யாமொழி

நமது மாநிலத்தில் செகண்டரி கல்வியில் பத்து - பதினொரும் வகுப்புக்களில் சிறப்புப் பாடங்களாக மாணவர்கள் பயிலுவதற்காகப் பிரிக்கப்பட்ட பாடப் பகுதிகள் உள்ளன. சான்ருகப் பொறி இயற்கல்வி, செயலகக் கல்வி முதலியன. இவை கல்வித் துறையில் புகுத்தப்பட்டு ஏறத்தாழ பதினேழு ஆண்டுகள் ஆகின்றன. அதற்கான ஆசிரியர்களும் நியமிக்கப்பட்டுப் பணியாற்றி வருகின்றனர். இவர்களுக்கு 1965ம் ஆண்டு வரை ஆண்டுதோறும் ஊதிய உயர்வு கொடுக்கப்பட்டு வந்தது. 1966ல் திடீரென இந்த ஊதிய உயர்வு நிறுத்தப்பட்டு விட்டது. இதற்குக் காரணம் இவர்களுக்குப் பணிமுறை விதிகள் ஏற்படுத்த வில்லையாம். பதினேழு ஆண்டுகளாக அரசாங்கம் என்ன செய்து வந்தது என்றே தெரியவில்லை. விசாரித்ததில் இவ்விதிகள் கல்வி இலாகாவினுல் பரிந்துரை செய்யப்பட்டு அரசாங்கத்துக்கு அனுப்பப்பட்டு விட்டது எனவும் அரசாங்கம் அங்கீகரித்து உத்தரவிட வேண்டுவதே பாக்கி எனவும் தெரிகிறது. இப்பதவிகள் சம்பந்தமான விதிகள் உடனடியாக வரையறுக்கப்பட்டு இவ்வாசிரியர்களின் பதவிகள் உறுதி செய்யப்பட்டு, ஊதிய உயர்வு, ஓய்வு விதிகள் நிர்ணயம் செய்யப்பட வேண்டும்.

புதுக்கோட்டை ஜெ. சுந்தரா

திரு ராசிபுரம் கிருஷ்ணசுவாமி நாராயணன் பிறந்த ஊரின் பெயருக்கு ஏற்பச் சிறந்த கைராசிக்காரராக விளங்குகிறார். வெளிநாட்டாரும் வணக்கம் செலுத்தும்படி சிறந்த இலக்கியங்கள் படைத்து வரும் அவரைத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் பாரதியார் சங்கமும் கேடயம் அளித்துக் கௌரவிக்கக் கடமைப்பட்டுள்ளன.

குன்றத்தூர் வி. ச. வாசுதேவன்

அன்றாட இல்லற அல்லல்களில் சிக்கித் தினறும் நடுத்தர வசதி படைத்த தமிழ் மக்களுக்குச் சில வருஷங்களாய் ஸ்ரீ காஞ்சி ஜகத் குருவைத் தரிசித்து உரையாடி மனச் சாந்தி பெறும் அதிருஷ்டம் இல்லை. இந்நிலையில் தாங்கள் வெளியிடும் காமகோடியின் கருணைமொழியால் ஆறுதல் பெற முடிகிறது.

சுருக்கமான விரிவுரையால் விளக்கம் கூறும் ஜகத்குருவின் கருணை மொழியைக் காண்பதால் எத்தனையோ காலமாகத் தீர்வு காண முடியாத — சாதனை புரியும்போது ஏற்படும் — சிக்கல்கள் விலகி சுலபமான தீர்வு கிடைக்கின்றது.

செம்பங்குடி எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
**Managing Editor:, T. Sadasivam.**

# தலைவலியா ?

## ஸாரிடான் 'ரோஷ்' சாப்பிடுங்கள்

## வலி நீங்கி...



### ...உங்களுக்குப் புத்துணர்ச்சி அனுபவமாகும்!

**அதுவே ஸாரிடானின் தனிப்பட்ட தன்மை!** வலியையும் அத்துடன் மனதில் உண்டாகும் 'பளு'வையும் போக்குவது மட்டுமல்லாமல், இதத்தையும் புத்துணர்ச்சியையும் கூட அளிப்பதற்காக ஸாரிடான் ஒரு தனிப்பட்ட முறையில் தயாரிக்கப்படுகிறது. ஸாரிடான் சாப்பிட்டதும் அனுபவமாகும் அற்புதமான மாறுதலைப் பாருங்கள்! உங்கள் மூளை மீண்டும் சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பிக்கிறது...வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது...சினேகிதர்களுடன் களித்து மகிழ முடிகிறது! ஒரே ஒரு ஸாரிடான் வலியைப் போக்கி இதத்தையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும். ஸாரிடான் எப்பொழுதும் உங்கள் கைவசம் வைத்திருங்கள். குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை போதும்.




தலைவலி, பல்வலி, உடல் வலி, அசௌகரியமான நாட்களில் வலி உடன் நிவாரணம் பெற ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

**'ரோஷ்'** தயாரிப்பு:

**ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்**

VT. 5626.(A).

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி